உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 11 } குரோதனஹு புரட்டாசிமீ கஉ { பகுதி 3
1925ஹு செப்டம்பர்மீ 16உ

## கடவுள் வணக்கம்.

என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
லனகமன தழலின் மெழுகாய்
இடையறா தருகவரு மழைபோ லிரங்கியே
இருவிழிக ணீரிறைப்ப
அன்பினுன் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
அமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை யுள்ளன்பி லாதவெனை
யார்க்காக வடிமை கொண்டாய்
புன்புலான் மயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு
புலைக்குடிலி லருவருப்புப்
பொய்யல்ல வேயிதனை மெய்யென்று நம்பியென்
புந்திசெலு மோபாழிலே
துன்பமா யலையவோ வுலகநடை யையவொரு
சொப்பனத் தினும் வேண்டி லேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. (1)

துன்பக் கடலிற் றுளைந்ததெல்லாந் தீர்ந்ததே
யின்பக் கடலி லிருவென்ன—வன்பிற்
கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்துவரு மானந்த மே. (2)

விண்ணருவி மேன்மேல் விளங்குவபோ லேயிரண்டு
கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித்—தண்ணமிர்த
வெள்ளமே யானந்த வெற்பே யெனத்தொழுவோ
ருள்ளமே ஞான வொளி. (3)

## அருஞ்பொருள் விளக்கம்.

1. உண்மை யடியவர்களின் நிலைமை இவ்விதமிருக்கு மென்பதை இப்பாடலில் வெளியிடுகிறார். அதாவது அன்பே வடிவமாயுள்ள பகவானிடத்திலேயே சதா அவர்களுடைய சிந்தை நிலைத்திருக்கும் என்பதாம்.

" அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே "

என்று திருமந்திரங் கூறுகின்றது.

அந்த " அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ் " என்கிறபடி அதன் சின்னங்களான எலும்புகளெல்லாம் நெகிழ்ந்துடைதல், மயிர்சிலிர்த்தல், உடல் இளகல், மனதுருகல், கண்ணீர்பெருகல், மூர்ச்சித்தல் முதலியவற்றை அடியவர் வெளிப்படுத்தலின் அவற்றை இங்கே விரித்துரைக்கின்றார். அத்தன்மையரான அன்பர்களை பகவான் தனக்குரியவரெனக் கருதி ஆட்கொள்ளுதலின் அந்த அன்பில்லாத என்னை எவர்க்காக அடிமை கொண்டாய் என்று பகவானைக் கேட்கின்றார்.

என்பு = எலும்பு.

நெக்குடைதல் = நெகிழ்தல்.

இடையறுது = நடுவே தடைபடாது (அதாவது தைலதாரைபோல் நிற்றல்)

இறைத்தல் = சொரிதல், பெய்தல்.

அன்பின் வழியதாகிய உயிர்நிலையைப் பெற்றவர் அந்த அன்பை வளர்த்தலன்றோ நன்று. அதை வளர்த்தற்கு தெய்வநம்பகமே ஆதாரம்.

" நம்பல் என்பதுவே அன்பின் நிலைமை
தெளிந்ததைக் கொண்டு தெளிதற் கரியவை
உளந்தனில் நம்பி உறுதியாய்ப் பிடித்துச்
சிறிது சிறிதுதன் அறிவினை வளர்த்தி
அனுபவ வழியாய் அறிவதை ; அந்தோ
அனுமா னுதியால் ஆய்ந்தறிந் திடுவோம்
அலதெனின் இலதென அயிர்ப்போம் எனத்திரி
வாதியர் அன்பொரு போதுமே அறியார்
தாய்முலைப் பாலுள்நஞ்சு ஆய்பவர் அவரே "

என்று மனோன்மணீயங் கூறுகின்றது.

ஆகவே மெய்யடியவரே உள்ளன்பை யுடையவராவர். அவர்கள் நெறியே சன்மார்க்கநெறி இதனைத் தாயுமானவரே மற்றோரிடத்தில்,

" அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப அன்பினுல் உருகிவிழிநீர்
ஆறுக வாராத முத்தியின தாவேச ஆசைக் கடற்குள் மூழ்கி
சங்கர! சுயம்புவே! சம்புவே! எனவுமொழி தழுதழுத்திட வணங்கும்
சன்மார்க்க நெறி".

என்றார். அஃது இல்லாத துன்மார்க்கனுகிய என்னை 'யார்க்காக அடிமை கொண்டாய்' என்று இங்கே கூறுகின்றார்.

" தெரியேன் பாலகனாய்ப் பல தீமைகள் செய்துவிட்டேன்
பெரியே னாயினபின் பிறர்க்கே யுழைத் தேழையானேன் "

என்று பிறர் கூறுவதுங் கவனிக்கத் தக்கதாம்.

ஆகிலும் எடுத்ததேகமோ, புன்புலால், மயிர், தோல், நரம்பு, என்பு மொய்த்திடும் புலைக்குடில் ஆதலின் அதில் அருவருப்பே அடைகின்றனன் என்கிறார்.

" என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோ யெவற்றி னுக்கு முறையுளாப் புறந்தோல் மூடும்
வன்புலை யுடம்பே யாவி வருத்திடும் பிணிவே றில்லை "

என்று காஞ்சிப் புராணங் கூறுவதுங் காண்க.

புலைக்குடில்=இழிவாகிய இருப்பிடம்.

இப்பாழில் எவ்வாறு என் புத்தியானது விரும்பி நுழையும்? என்னைக் கிருதார்த்தனாக்கி யாட்கொள்ளவேண்டும் என்று விண்ணப்பித்துக் கொள்ளுகிறார்.

உலகம் துக்கமயம் என்பதை நாம் அனுபவமாகக் கண்டு வருகிறோம். ஆகையால் அதன் சம்பந்தத்தைக் கனவிலும் விரும்பேன் என்கிறார்.

2. இப்பாடலில் பிரபஞ்சவாழ்க்கை துக்கமயமானது. ஆதலால் இதனை நாம் கூர்ந்துநோக்கி வெறுத்துச் சுகமாய் வாழவிரும்புவோமானால் இறைவனைத் தியானித்து மனதுருகிக் கண்ணீருங் கம்பலையுமாக நிற்றல் வேண்டும். அவ்வாறு நிற்பின் பேரின்ப சுகமானது சீக்கிரத்தில் கைகூடும் என்னுங் கருத்தை வெளியிடுகின்றார்.

துளைந்தது=மூழ்கினது.

தீர்ந்தது=முடிவுபெற்றது.

3. மனம் வாக்கு காயம் என்கிற திரிகரணங்களாலும் வழிபடுவோரது இருதயத்தில் இறைவன் ஞானப் பிரகாசமாய் விளங்குவன் என்று இந்தப் பாடலில் தெரிவிக்கின்றார்.

விண்ணருவி மேன்மேல் விளங்குவ போல்=ஆகாயகங்கை மேலுமேலும் பெருகயெடுத்து ஓடுவது போல.

தண்ணமிர்த வெள்ளமே=குளிர்ச்சி பொருந்திய அமிர்தப் பிரவாகமே.

வெற்பு=மலை.

கண்களிடத்தில் வெள்ளம் பெருக்குவது மனத்தின் தொழில். கைகூப்புதல் காயத்தின் தொழில்.

தண்ணமிர்த வெள்ளமே, ஆனந்தவெற்பே எனச்சொல்லுதல் வாக்கின் தொழில்.

---

# ஆனந்தபோதினி

குரோதனஹு புரட்டாசிமீ கவ

## பத்திரிகையின் அந்தரங்கம்.

நமது தேசத்தவரிற் பலர்க்கு இன்னும் பத்திரிகையின் அந்தரங்கம் விளங்கவில்லை. எத்தனையோ முறை பத்திரிகாசிரியர் பலர் இதனை விளக்கியிருக்கிறார்கள். அவ்விளக்கம் இளக்கம் பெற்றுச் செவிடன்காதில் சங்கை ஊதினதுபோலாகி வருகின்றதே யொழிய பத்திரிகையின்கண் பூரண அபிமானமும் ஸ்திரமான பற்றும் நம்மவர்க்கு ஏற்படவில்லை யென்றே நாம் துணிந்து கூறலாம். உயர்தர பண்டிதர் பலர்க்கே இவை இல்லையெனின் ஏனையோரைக் குறை கூறுவது தன்மவிரோதந்தான். ஆகவே பத்திரிகையால் விளையக் கூடிய பெரும்பயனை அநேகர் இழக்கலாயினர். இது பரிதாபத்திற்கே யிடமாகிறது. மக்களுக்குக் காரியசித்தியைத் தரவல்ல பற்பல உத்தம போதிப்பையும், அறிவின் அபிவிர்த்திக்குரிய சிறந்த விஷயங்களையும், மற்றுமுள்ள பொது சமாசாரங்களையும், செவிக்கும் சிந்தைக்கும் இனிப்பை யுண்டாக்கக்கூடிய எளியநடையில் காதலாமலகம்போ லெடுத்துக்காட்டுவது பத்திரிகையே . பத்திரிகைகளைப் போன்ற அந்தரங்க நண்பர் இப்பரந்த உலகில் வேறெவரிருக்கின்றனர்? பத்திரிகை விஷயமாய் முன்னோர் கொண்ட அபிப்பிராயத்தை இங்கு ஒருவாறு சுருக்கிக் கூறுவாம்:

தருமார்த்த காம மோக்ஷங்களுக் கனுகூலமான உட்கருத்துகளை ஒருவர்க்கொருவர் தெரிவித்து, பேதாபேதங்களை வாதித்துச் சிக்கறுத்துக்கொண்டு தேர்ந்து, தேர்ந்தபடி நின்று நலம்பெறுவதற்கு ஒப்புயர்வற்ற கருவியாவதும் பத்திரிகையே என்பது அறிவாளரின் துணிபு. மற்றும், பெரும்பான்மையாக நாம் பேதைமையென்னும் வித்திலிடமாகப் பிறந்து, நல்வினை தீவினையாகிற செம்பொன் கரும்பொன் விலங்குகளாற் கட்டுண்டு, ஆசைக்கடலினின்

றுங் கரையேற வழியின்றி, இன்பதுன்பமான வலேயிற்சிக்கிப் பசிப் பிணியை மேற்கொண்டு, பிரயோசனமற்ற மனோரச்சியத்திலழுந்தி, மாளா விடும்பைக் காளாகி மரிக்கச் சித்தமாயிருக்கிறோம். இத்தன் மையரான நமக்கு இணையற்ற புணையாய் நின்று, நல்லறிவு புகட்டி, நம்மைப் பிறவிக்கடலி னின்றும் கரையேற்றும் யோக்யதை வாய்ந் தது பத்திரிகையே யல்லவா !

பின்னும், ஆதித்தன் எவ்வாறு தன் கிரணங்களால் புறவிருளே யகற்றிப் பொருள்களைக் கண்ணுக்குத் தெரியும்படி காட்டுகிறனோ அவ்வாறு தனது போதனு விஷயங்களாகிறபேரொளியால் நம்மைக் கவர்ந்திருக்கும் அஞ்ஞான அகவிருளைப் போக்கி, நமதறிவிற்கு, அசத்தாயுள்ள பொருள்களுக்கு ஆந்நியமாய் சத்தாயுள்ள பொருள் களை ஐயம், திரிபு, அறியாமை யறத் தெள்ளத்தெளிவாய் விளக்கிக் காட்டும் ஞானுதித்தனும் பத்திரிகையே யன்று ?

இன்னும், உலகின்கண் துர்ச்சனர்களால் நேருங் கொடுமையா கிய கோடையால் தகிப்புண்டு வதங்கிநிற்கும் சற்சனப்பயிர் செழிப் புற்று ஓங்கும் வண்ணம், அக்கொடுமை வெப்பத்தைத் தலையெடா மற் செய்து இரக்ஷிக்க, ஞானமிர்த சோனமாரியைப் பொழிகின்ற கிருபாமேகத்தை யொத்து விளங்குவதும் பத்திரிகைதான் என்ப தில் ஐயப்பாடு முண்டோ ?

அன்றியும், ஜனங்களுக்கு இதோபதேசம் புரிவதில் சற்குரு வையும், சாராம்ஸமான கர்ணமிர்தத்தை அன்போடும் ஊட்டுவதில் மாதாவையும், உத்தமமான கலாஞானத்தை யளிப்பதில் பிதாவை யும், நன்மையை விளைவிக்கத்தக்க உறுதிப்பொருள்களை வற்புறுத்திச் சொல்லுவதில் உறவினரையும், துஷ்ட நிக்கிரகஞ்செய்து சிஷ்டபரி பாலனம் பண்ணுவதில் செங்கோலரசையும் நிகர்த்துப் பொலிவதும் பத்திரிகையே யானல் அதன்பெருமையை அளவிட்டுரைக்க எவரா லாகும்? இத்துணை மகத்துவம் வாய்ந்த பத்திரிகையைத் தேச க்ஷேமத்தின்பொருட்டு நடைபெறச்செய்து வருவதைப் பார்க்கி னும் நாம்கைப்பற்றத் தகுந்த உத்கிருஷ்டமான தருமம் வேறென்ன விருக்கின்றது ?

மேல்நாட்டாரும் அமெரிக்கரும் கல்வியிலும் கேள்வியிலும் நிபுணத்துவ மடைந்து, வினைசெயல்வகை, வினைத்திட்பம் இவைக ளில் சிறப்புற்று, செல்வப் பெருக்கமும், படைவலியும், அரண்வலி

யும் மேம்படப் பெற்றுப் பெருநிலமன்னராய்த் தமதாணைவழி யுலகம் தங்கத் தாம் பெரிய நாயகராய் வாழ்வெய்தி நிலைபெறுதற்கு மூலாதாரம் பத்திரிகைக ளென்பதே ஆன்றோர் கொள்கை. இஃதுண்மையே. எந்த இடத்திலும், எந்தக்காலத்திலும், யாவர்க்கும், அவர் கோரும் புருஷார்த்த சித்திகளைக் கோரியபடி வெளி நின்று அளிக்கவல்ல பிரத்தியக்ஷ தெய்வம் பத்திரிகையேயாம்.

இத்தகைய பிரயோசனங்கள் வாய்ந்தவைகளான பலபல சமாசார பத்திரிகைகள் நமது நாட்டில் தோன்றின. அவற்றுள் சில இடையூற்றினால் நடைபெறா தொழிந்தன. சில நடைபெற்று வருகின்றன. இப்பத்திரிகைகளால் நமதுநாட்டார் ஆங்கிலேய இராச்சிய முறைகளின் நுட்ப விவேக விளக்கத்தையும், சுதந்திர ஜீவனத்திற்கான நானாவித முயற்சிகளையும் பெற்று, சுதேசக்ஷேமத்திற் கேற்ற அறிவொற்றுமையை எய்தி யிருக்கின்றனர்.

நமது ஆனந்தபோதினியும் சென்ற பத்து வருடங்களாகப் பலர்க்கு நன்மைபயந்து வருகின்றதென்று சந்தாநேயரிற் பலர் நமக்கெழுதி யிருக்கின்றனர், எழுதிவருகின்றனர். அவற்றில் சில வியாசங்கள் நமது போதினியில் அவ்வப்போது பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. அங்ஙனம் பலர்க்கு நம்பத்திரிகையில் அபிமானம் ஏற்பட்டிருந்தும், சிலர், தாங்கள் எழுதிய வியாசங்களை நம்போதினியில் பிரசுரிக்கவில்லை யென்றும், சிலர் எங்களுக்கு விருப்பமானவியாசங்கள் வெளிவரவில்லை யென்றும் பலகாரணங்களைக் கூறிப் பத்திரிகையை வேண்டாமென்று திருப்பி விடுகின்றனர். வியாசங்கள் அவர்களுடைய நோக்கம்போல் வெளிவாராததற்குப் பலகாரணங்களுண்டு: இடமின்மையால் சிலவியாசங்கள் தாமதத்தில்வெளிவரும்; சில வியாசங்கள் வெளிப்படுத்தக் கூடாதனவா யிருக்கும். வேறு சிலகாரணங்களாலும் வியாசங்கள் வெளிவராதிருத்தல் கூடும். அவற்றை விரிக்கிற்பெருகும். உலகம் பலவிதமாதலின், எல்லோருடைய நோக்கங்களையும் ஒரு பத்திரிகையால் நிறைவேற்றுதல் இயலாது. ஆதலின், அபிமானிகள், பத்திரிகையின் பெரும்பான்மையான நலங்களைக் கருதவேண்டுமே தவிர, சிறுசிறு காரணங்களைக் கூறிப் பத்திரிகையைப் புறக்கணிப்பது பத்திரிகாபிமான மாகாது. பொதுப்படப் பத்திரிகைகள் விஷயமாக மேலே நாம் காட்டிய முன்னோரின் கருத்தை யுள்ளபடி அறிந்தவர்கள் தாம்விருப்பத்துடன் சந்தாதாரராகச் சேர்ந்துள்ள எப்பத்திரிகைகளையும் கைவிடாது ஆதரித்து,

அப்பத்திரிகைகளால் சித்திக்கும் பாக்கியங்களையடைந்து "பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம், நயனுடையான்கட்படின்" என்னும் உத்தரவேத உரைக்கு இலக்காயிருந்து வருவார்கள்.

பத்திரிகாபிமானம் நமக்கு ஏற்பட்டாலொழிய நமது நாட்டை நாம் முன்னேற்ற மடையச்செய்ய முடியாது. இதனை நாம் நிதான மாகச் சிந்தித்து நோக்குவோமானால் இதன் மேம்பாடு நமக்குப் புலப்படாமற் போகாது. அவசியம் . புலப்படும். அப்போது நாம் பத்திரிகையின் அந்தரங்க அருமையையுணர்ந்து அதைக் கௌரவப் படுத்த முற்படுவோம்.

இங்ஙனம் பத்திரிகை பயனுடையதாயினும், அதன்மீது எல் லோரும் அபிமானம் வைக்கவேண்டியது அவசியமெனினும், அத் தகைய அபிமானம் ஏற்படுவதற்குப் பத்திரிகை சம்பந்தமாகச் சில ஒழுங்குகளும் இருத்தல் வேண்டும். எவ்வாறெனில், முதலில் பத்தி ரிகையை நடத்தும் பத்திரிகாசிரியர் அநேக நூற்கல்வியும் கேள்வி யும் பெரிதும் உடையவராய், ஒழுக்கத்திற் பிறழாது அரசாங்க விசு வாசத்தைக்கொண்டு, பிரஜானுகூலங்களுக் குரிமைபூண்டவராய் ஜீவகாருண்யம் முதலிய சிறந்த குணங்களை மேற்கொண்டவராய் இருத்தல் வேண்டும்.

மேலும், தமது அறிவிற்கு உசிதமான விஷயங்களைப் பழுதற ஆய்ந்து பத்திரிகையில பிரசுரித்தல் வேண்டும். உள்ளதை மறைத் தலும் இல்லதை வெளிப்படுத்தலும் கூடா. உண்மைகூறும் விஷ யத்தில் அவர்க்குத் துணிபு ஏற்படவேண்டும். இன்னார்வேண்டியவர் இன்னார் வேண்டாதவர் என்னுங் கொள்கையை அவர் அறவே விடு தல் வேண்டும். அரசாங்க முறைமைகளையும், பிரஜைகளின் முறை மைகளையும், ஒப்பநாடி, குற்றத்தைக் கடிந்து குணத்தை எவர்க்கும் போதித்தல் வேண்டும். தேசக்ஷேமத்திற் குரிய பொது நலத்தில் பெரிதும் கவனம் செலுத்துதல் வேண்டும். சுயநலம் பாராட்டுவதை அறவே ஒழித்துவிட வேண்டும்.

இரண்டாவதாக பத்திரிகையை வாசிப்போரும் "இது நாம் படிக்கும் பொருட்டே பிரகடனம் செய்யப்படுகின்றது; ஆதலின் இதை அவசியம் வாசித்தல்வேண்டும்" என்னும் விருப்புடன், பிரதி தினமும் தமது வைதிக லௌகிக கருமங்களை முடித்தபிறகு தெளி ந்த உள்ளத்தோடிருந்து, பொறுமையாக அதனைப்படித்து, அதி லுள்ள விஷயங்களைத்திரட்டி, ஒரு வெற்றுப் புத்தகத்தில் குறித்துக்

கொள்ள வேண்டும். தமக்குவரும் பத்திரிகைகளைப் பத்திரமாகச் சேர்த்துவைத்து, அந்தந்தக் காலமுடிவில் புத்தகரூபமாக்கி வைத்துக்கொண்டு, தமக்கும் பிறர்க்கும் அவை பயன்படும்படியாகச் செய்யவேண்டும். வாசித்ததும் பத்திரிகைகளை அலக்ஷியஞ் செய்து பிரயோசனமற்ற காரியங்களுக்கு உபயோகப் படுத்துதல் தவறும். கைப்பொருளீந்து பெற்ற பத்திரிகைகளைக் காற்றூசிக்கு ஒப்பிடுவது அழகாமா! இப்படி எறிபவர், பிறிதோர் சமயத்தில் யாதானுமோர் விஷயத்தைக் கவனிக்க நேரின் "ஐயோ! என் பத்திரிகையை நான் வீணே யழித்துவிட்டேன். இப்போது அதிற்கண்ட விஷயத்தை மீண்டுங் காண விருப்பங்கொண்டும் சமயத்துக்கது கிடைக்கவில்லை. நான் என்செய்வேன்" என்று வருந்தல் நேரிடுகின்றது. ஆதலால் பத்திரிகையைப் பத்திரப்படுத்த வேண்டும். தக்க காலத்தில் உதவும் நண்பன் அப்பத்திரிகையே. இவ்விருதிறத்தாரும் பத்திரிகையின் விஷயத்தில் இவ்வகைக்கிரமங்களை அனுசரித்து வந்தால்மாத்திரமே எல்லோரிடத்தும் பத்திரிகாபிமானம் ஏற்பட்டு மேற்கூறியபடி அதன் பயனை எவரும் எளிதிலடைய ஏதுவுண்டாகும்.

இதுகாறுங் கூறியவற்றால் பத்திரிகையின் அந்தரங்கம் இன்னதென்பது ஒருவாறு எல்லோருக்கும் விளங்கும். நமது ஆனந்தபோதினி, மேற் கூறிய முறைகளை அனுசரித்தே எம்மால் நடத்தப்பட்டு வருகிறதென்பதையும் பொது ஜனங்களால் அபிமானிக்கப்பட்டு வருகிற தென்பதையும் நம் நாட்டினருட் பெரும்பான்மையோர் அறிவர். எனினும் சிறுபான்மையோர் இதன் அந்தரங்கத்தை யுணராது இதனைப் புறக்கணித்து வருகின்றனர். அவர்களின் பொருட்டே இங்ஙனம் பத்திரிகையின் இயற்கையைப் பற்றி நாம் விளக்கி யெழுதினோம். ஆதலின் அத்தகையினரும் நம் பத்திரிகையில் அபிமானம்வைத்து, அற்பபொருளாகிய வருடசந்தா ரூபா ஒன்றை உடனுக்குடன் செலுத்தி நமது பத்திரிகையை ஆதரித்துப் பெரும்பயனை யடைந்துவருமாறு எல்லாம் வல்ல இறைவன் கிருபை செய்வானாக.

ஓம் தத் ஸத்.

---

**சந்தாதாரர்களுக்கு.—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.**

# கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

இந்த வாக்கியத்தின் உண்மையை முற்றாய் உணர்ந்தவர்களுக்கு மெய்யான சந்தோஷமும் மன ஆறுதலும் உண்டென்பதற்குச் சந்தேகமில்லை. அனேகர் கடவுளுடைய திருவருளின் சக்தியை அறியாதவர்களா யிருக்கிறார்கள். "சிவாய நமவென்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை" யென்பதைப் பரிகாசமாக எண்ணுகிறார்கள். எத்தனையோ பெரிய மகான்கள் இடைவிடாது ஈஸ்வரதியான முடையவர்களாய் இருந்ததன் பயனாகச் சொலற்கரும் தீமைவிளைக்கக்கூடிய இடர்களிலிருந்து தங்களைத் தப்புவித்துக் கொண்டதாகச் சரித்திரங்களில் சொல்லப்பட் டிருப்பவைக ளெல்லாம் பெரும் கட்டுக்கதைகளென்று பிதற்றுகிறார்கள். இப்படியெல்லாம் சிலராவது எண்ணுவது கலிகாலத்தின் கோலமென்றே சொல்ல வேண்டி யிருக்கிறது.

கடவுளை நம்பும் விஷயத்தில் அனேகர் தங்களைத் தாங்களே அணுப்புகிறார்கள். மனுஷன் தன்னாற்றலாய்ச் செய்பவைகள் போலத் தோற்றுபவைக ளெல்லாவற்றையும் தான் செய்ததாக நினைத்து இறுமாந்திருக்கிறான். தன்னால் ஒரு காரியம்செய்ய முடியாதென்று கண்டவிடத்து மாத்திரம் கடவுளைப்பற்றி நினைக்கிறான். தான் செய்ய முடியாமலிருப்பது விதியின் பயனென்று முடிக்கிறான். இதை நாம் உற்று உணரும் பொழுதும் அனுபவத்தில் காணும் பொழுதும் மிகவும் வேடிக்கையா யிருக்கும். "அவனன்றி ஓரணுவும் அசையா" தென்பதை அனேகர் தங்களிடத்திருக்கும் ஆணவமுதிர்ச்சியினால் மறந்து விடுகிறார்கள். இம்மறதியே சனங்களின் சங்கடங்களுக்குப் பெரும்பாலும் காரணமா யிருக்கின்றது. சுகபலம் செல்வம் அதிகமா யிருப்பவர்கள் இயல்பாய் உலகவிஷயங்களுக்குள் முற்றாயமிழ்ந்தித் தலைவனுடைய தியானம் சற்றும் இல்லாதவர்களா யிருப்பதை நாம் காண்கிறோம். இதுபற்றித்தான் இடையிடையே மனுஷருக்குக் கஷ்டங்கள் நேரிடுவது அவர்களுக்குப் பெரும் நன்மை பயத்தற்கு ஏதுவாகுமென்று சொல்வதுண்டு. பிறந்த நாள்முதல் இறக்கும்வரையும் ஒருவன் ஒருவகையான கஷ்டத்தையும் அனுபவியாதிருக்கும் பாக்கியத்தைப் பெறக்கூடுமாயின் அவன் கடவுளை நினைக்கவேண்டிய அவசியம் ஒருபோதும் ஏற்படாது. உலகப் பொருட்களின் பற்று அவனுக்கு மிகவும் அதிகரிக்கும். இதுவுமன்றிப் பிறருக்கு இயன்றவரையில் தீமைசெய்யக் கொஞ்சமும் யோசிக்கமாட்டான். பிறவிப்பிணியை நீக்குதலின் அவசியம் அவனுக்குக் கொஞ்சமும் தோற்றாது. இப்பிறவியி லிருந்துகொண்டே இன்னும் அனேக பிறவிகளுக்கு அஸ்திவாரம் போட்டபடி யிருப்பான்.

கடவுளிடத்திலே பூரண விசுவாசம் வைத்திருப்பவர்களுடைய சுகானுபவம் அவர்களுக்கு மாத்திரமேயன்றி மற்றவர்களுக்குச் சரியாய்விளங்காது. அது மற்றவர்களுக்கு விளங்கப்படுத்தக் கூடியதொன்றல்ல. அனேகர் கடவுளை நினைத்தவுடன் தாங்கள் எண்ணிய காரியங்களெல்லாம் சித்தியெய்தா

திருந்தால் அவரைக் கண்கெட்ட கடவுளென்றும், கடவுளுக்குக் கண்ணில்லையென்றும் சொல்வது வழக்கம். இதுவுமன்றி, தாங்கள் அருமையாய் வளர்த்த பிள்ளைகள் யாராவது இறந்துவிட்டால் கோயில்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனம் செய்வதையும் நிறுத்திவிடுகிறார்கள். இப்படிப் பட்டவர்களுக்குக் கடவுளிடத்தில் எப்படிப்பட்ட மதிப்பு இருக்குமென்பதைப் பற்றியும் அவரின் திருவருட் சக்தியைப்பற்றியும் அவர்கள் என்ன வகையான எண்ணம் வைத்திருக்கிறார்கள் என்பதைக் குறித்தும் நாம் இலகுவாய் விளக்கிக்கொள்ளலாம். உலக விஷயங்களில் அனுகூல மடைவதற்காகக் கடவுளைப் பிரார்த்திக்கிறவர்களை உலகத்தில் அதிகமாய்க் காணலாம். ஆனால் தங்களைப் பந்தித்திருக்கும் மும்மலங்களையும் போக்கித் திருவருட் சக்தியால் தங்களைச் சிவத்தோடு ஒன்றித்து நிற்கச் செய்யத்தக்க வல்லமையைக் கொடுக்கும்படி ஈஸ்வரனை அல்லும் பகலும் வேண்டி நிற்பவர்களைக் காண்பது அரிதிலுமரிதாயிருக்கின்றது.

நஷ்டம் வரும்பொழுது மாத்திரம் கடவுளை நினைப்பவர்களுக்கும் கடவுள் இல்லையென்று சாதிக்கும் நிரீச்சுரவாதிகளுக்கும் அதிகபேதமிருக்கிறதாகத் தோற்றவில்லை. நிரீச்சுரவாதிகளிற் சிலர் முன் சொல்லப்பட்டவர்களைக்காட்டிலும் ஜீவபிராணிகளில் அன்பு அனுதாபம் காட்டக்கூடியவர்களாயிருக்கிறதை நாம் காண்கிறோம். இவர்கள் பலவகையான தீமைகளிலுமிருந்துவிலக்கக்கூடியவரையில் மற்றவர்களுக்கு நன்மைசெய்தல் இவ்வுலகஜீவியத்தின் அனுகூலத்திற்கு இன்றியமையாததெனை எண்ணி நடக்கிறார்கள். ஆனபடியால் ஆபத்து நேரிடும் காலத்தில் மாத்திரம் அரனை நினைப்பவர்கள் அதனால் அடையத்தகும் பயன் அற்பமா யிருத்தலை எண்ணி அவரின் அனந்த சக்தியைக் குறைவாய் நினைத்தல் பெருந் தவறாகும்.

நிரீச்சுரவாதி இகத்தைப்பற்றி மட்டும் நினைத்து அதன் அனுகூலத்திற்குரிய வழிவகைகளைத் தேடுகிறான். இகபரம் இரண்டிலும் நம்பிக்கை வைத்து முத்திப் பெரும்பேறு சித்தியெய்த விரும்புபவன் எல்லாம் வல்ல இறைவனை இரவும் பகலும் நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் என்றும் பூரண நம்பிக்கையோடும் நிறைந்த அன்போடும் தியானிப்பது அத்தியாவசியகம். அப்படிச்செய்யும் தோறும் அவனுக்கே ஒரு வகையானமன ஆறுதலும் சந்தோஷமும் உண்டாதல் மாத்திரமன்றி அவனுடைய சொல் செயல் முதலியவைகளில் மற்றவர்கள் மெச்சத்தகும் ஒருவகையான வித்தியாசத்தையும் காணுவார்கள். இந்த நிலையை அடைதற்கு மானிடர் அனைவரும் முயற்சித்தல் வேண்டும். அப்படிச்செய்யுந்தோறும் அவர்கள் தங்கள் ஈடேற்றத்தை நாடுகிறது மாத்திரமன்றி மற்றும் தங்களைச் சூழ இருப்பவர்களுக்கும் ஓர் சிறந்த முன்மாதிரியாய் இருப்பார்கள்.

செய்யத் தகாதவற்றைச் செய்வதாலும் செய்ய வேண்டியவற்றைச் செய்யாது விடுவதாலும் எண்ணாது ஒழிக்கவேண்டியவற்றை எண்ணுவதாலுமே நாம் பலமுறைகளிலும் துக்கத்தை அனுபவிக்கிறோம். இத்துக்க

நிவிர்த்திக்குச் சிவத்தியான மன்றி வேறொன்றும் உதவிபுரியாது. இதைச் சிலர் அறிந்திருந்தாலும் பலர் அறியாதிருக்கிறார்கள். ஆனால் எல்லாரும் அறிந்ததுபோலப் பாசாங்குபண்ணி அல்லலுறுகிறார்கள். உண்மையான வழிதெரியாமல் மயங்கி நிற்கிறவர்களைக்காட்டினும் சரியான முறையை அறிந்தும் அதன்வழி ஒழுகும் மனத்திடமில்லாதவர்களுக்காகவே நாம் பெரிதும் பரிதாபப் படவேண்டும். உலகத்திலேயுள்ள சனங்களில் பெரும்பாலார் இப்படிப் பட்டவர்களென்றே சொல்லலாம். இவர்கள் மனம் போன போக்கெல்லாம் போய்க் கடைசியாய்க் கடவுளென்று ஒருவர் இருக்கிறாரா என்ற கேள்வியோடு தங்கள் சீவியத்தை முடிக்கவேண்டியதாய்வரும்.

போதனையால் மாத்திரம் பயனொன்று மில்லை. சற்போதனையைச் சாதித்தலால் அடையத்தகும் பயன் அற்பமல்ல. ஆதலால் எத்தொழிலைச் செய்யும்பொழுதும் சும்மா இருக்கும் நேரத்திலும் இடைவிடாது இறைவனைத் தியானிக்கும் பழக்கத்தை நாம் நாள்தோறும் பழகிக்கொண்டு வரவேண்டும். அழியும் பொருளொன்றிலும் நிலையான நேசம் வையாது தாமரையிலைத் தண்ணீர்போல, பார்த்தால் உலகத்தவர்போ லிருக்க மாத்திரம் பயின்று வருதல் நன்மைக்கு ஏதுவாகும். ஒரு கொடிய நோயுற்றிருக்கும் போது, சிலகாலம் ஒரு வைத்தியனிடத்திலும் வேறு சிலகாலம் இன்னொரு வைத்தியனிடத்திலும் நாம் மாறிமாறி நம்பிக்கைவைத்து வைத்தியம் செய்வது போலல்லாமல் வாழ்விலும் தாழ்விலும் சுகமாயிருக்கும்போதும் வியாதியுற் றிருக்கும்போதும் ஒரே மனதோடு ஈஸ்வரனை முற்றாகநம்பினால் நற்கதியடைந்து உய்வது நிச்சயமென்பதைக் கனவிலும்மறவாதிருப்போமாக.

கா. சின்னப்பா, அளவெட்டி, யாழ்ப்பாணம்.

---

## ஆரம்ப ஆசிரியர்கள்.

(10-ம் தொகுதி 413-ம் பக்கம் தொடர்ச்சி)

மூலாதாரக் கல்விபயிலும் மாணவர்களின் தன்மையை, ஒவ்வொரு ஆசிரியர்களும் அநுசரித்து நடந்து கல்விப்பயிற்சி செய்தல் வேண்டும்; இவ்வாறு நடவாமல் முன்கூறியுள்ளபடி சிறுவர்களிடம் அநுபவ ஆசிரியர்கள் பழகாமல், அநுபவமில்லாத ஆசிரியர்களான புதிய டிரைனிங் ஆன ஆசிரியர்கள் பழகுவதால், அந்தோ! அவர்கள் நடத்தும் தன்மை விளம்ப முடியாது. அதற்கு ஆனந்தபோதினியும் இடந்தராது.

கிராமாந்தரங்களில் மூலாதாரக் கல்விகற்கும் சிறுவர்களின் தந்தைமார்கள் "பாடசாலைகளில் நம்முடைய சிறுவர்களுக்கு

'காகம் கருமைநிறம்
சுண்ணாம்பு வெள்ளை நிறம்
காலில்லாதவன் நொண்டி
கண் இல்லாதவன் குருடன்
கை இல்லாதவன் மூடவன்'

என்று ஆசிரியர்கள் வித்தை கற்பிக்கிறார்களே, இதனால் நமது மக்கள்படிப்பில் முன்னேற்றமடைவார்களா? இவ்விஷயங்களை நமது பாலர்கள் அறியாதவர்களா? ஆசிரியர்கள் மிகவும் சோம்பேறிகள். முற்காலத்திய ஆசிரியர்கள் முயற்சியுடன் பிள்ளைகளுக்கு கடினமான கல்விபோதித்து வந்தார்கள். அக்காலத்திய முதல்வகுப்பின் பாடபுத்தகத்தைத் தற்காலத்திய நான்காவது வகுப்பின் மாணவன் வாசிக்க முடியாது திகைக்கின்றான்.

தவிர, ஆசிரியர்கள், தக்கபடி பிள்ளைகளுக்குப் போதிக்கும் திறமையற்றவர்களா? இல்லை, இல்லை. பின்னை என்ன என்றால்,

போர்டு, முன்வியல் முதலிய ஸ்கூலில் உள்ள ஆசிரியர்கள், ஸ்கூலில் மணிப்படி ஆஜரானதும், ஆஜர்பட்டி எடுத்துவிட்டு, கும்பல்கூடி 'ஏன் சார், துரைசாமிஐயருக்குச் சம்பளம் 15-ல் இருந்து 20-க்கு உயர்த்தப்பட்டது. அவருடைய அதிர்ஷ்டமே நல்லதுசார். நான் 15-வருடசர்வீஸ்சார். எனக்கு பிரமோஷன் இல்லை சார். என்செய்வது நான் பிராமண குலத்தில் பிறவாதொழிந்தேன். சார்! இப்போதைய பிராமண அதிகாரிகள் சுயஜாதி யபிமானத்துடன் வேலைசெய்கிறார்கள் சார்' என்று வீண்வார்த்தைகளைப் பேசிக்கொண்டும், தலைமை உபாத்திமார், உதவி உபாத்திமார்களோடு சச்சரவு செய்துகொண்டு எந்தநேரமும் சமாதானம் கேட்பதனுலேயே காலத்தைக் கழித்துக்கொண்டும், 'பார்ப்பாத்திஅம்மா மாடுவந்தது பார்த்துக்கொள்' என்றபடி மணி ஆயிற்று என்று 'கூத்தாடி கிழக்கேபார்ப்பான் கூலிக்காரன் மேற்கேபார்ப்பான்' எனுமாப்போல் கடியாரத்தில் விழி செலுத்திக் காலத்தைக் கழித்து விடுகிறார்கள்.

அந்தோ! நமது குழந்தைகள் தாங்களே கற்றுக்கொள்ளவேண்டுமே ஒழிய ஆசிரியர்களால் முன்னேற்ற மடையார்கள்" என்று குறை கூறுகிறார்கள்.

ஆசிரிய மானேஜர்கள், ஸ்கூல்களின் வருடாந்தர பரீட்சைகாலத்தில் பிள்ளைகளின் பெற்றோர்களிடம் இதமாகப்பேசி, பிள்ளைகளைச் சேர்த்துப் பாடசாலையை அலங்காரம் செய்து, வரும் பரீட்சை யதிகாரிகளின் மனம்சந்தோஷிக்க நடந்துகொண்டு கிராண்டுப்பணம்பெறுகிறார்கள் என்ற கிளர்ச்சி ஒவ்வொரு கிராமாந்தரங்களிலும் சிறுவர்களின் பெற்றோர் செய்வது யாவரும் நன்கு அறிந்ததே. ஸ்தல ஸ்தாபனத்தின் கீழுள்ளபாடசாலைகளின் தலைமை உபாத்திமார்கள், தம் தலைமைக்குக் கீழுள்ள உதவி ஆசிரியர்களைத் தாழ்ந்தவர்களாக எண்ணி, அவர்களைச் சரியானபடி நடத்தாமலும் *உதவி என்பதன் பொருளைச் சிந்திக்காமலும், உதவிகள்மீது குற்றங்கள் கூறி அவர்களைச் சமாதானம் கேட்பதிலேயே காலத்தைக் கழித்துவிடுகிறார்கள். இதனால் உதவிகள் மனம் வேறுபட்டு வேலையின்மீது சிந்தனையின்றிசமாதானம் எவ்வகையில் எழுதுவதுஎன்ற ஏக்கத்திலேயேமனதைக் கடாவிக் காலம் போக்குகிறார்கள். ஒற்றுமையா யிருக்கும் ஆசிரியர்களோ

* உதவி=சகாயம், ஒத்தாசை.

தங்களை வருத்தும் கொடிய வறுமைநோயினால் பீடிக்கப்பட்டவர்களாகிக் கிராமவாசிகள் கூறியபடி, சம்பளம் உயர்வாகவில்லையே பிரமோஷன் ஆக வில்லையே என்ற கிளர்ச்சிகளில் காலம்போக்கு கின்றார்கள்.

இத்தகைய காரணத்தாலே ஆசிரியர்கள் போதனையில் சிரத்தையின்றி பெற்றோர்கள் தங்களுக்குச் சௌகரியம் செய்ய முன்வரவில்லை யென்றும், காய்கறிகள் இலவசமாகத் தரவில்லையென்றும் சொல்லி ஸ்கூலுக்குச்செல் வதும், 'மாடுமேய்த்தமாம் கோலைப் போட்டமாம்' என்றபடி வீட்டுக்கு வந்து விடுவதுமா யிருக்கிறார்கள். ஸ்தல ஆட்சி அதிகாரிகள் கஷ்டகாலத் தையும் விலைகளின் ஏற்றத்தையும் கவனித்து, ஆசிரியர்களின் வறுமைதீர மாதம் ஒன்றுக்குக் குடும்பத்துக்குப்போதுமானபடி சம்பளம் ரூபா 30-க்குக் குறையாமல் கொடுத்துக் காப்பாற்றினால் ஆசிரியர்கள் கவலையின்றி மூலா தாரக் கல்வியை விர்த்திசெய்வார்கள். கல்விக்காக வரிவசூல் செய்கிறார் களே தவிர ஆசிரியர்கள் குறைகளைக் குறைத்தாரில்லை.

தலைமை ஆசிரியர்கள் உதவி ஆசிரியர்கள்மனம் வேறுபடாதபடி அவர் களை உற்சாகப்படுத்தி, வேறு விஷயங்களை ஸ்கூல் நேரத்தில் கிளர்ச்சி செய்யாமல் போதிக்கும் விஷயத்தில் கவனிக்கச் செய்வார்களானால், பெற் றோர்கள் மனம்களிக்க, பிள்ளைகள் படிப்பில் தேர்ச்சியடைவார்கள். அதி காரிகள் ஆசிரியர்கள் மிடி என்றும் தலைகாட்டாது ஓம்படிசெய்வார்கள்.

ஒருவன் ஒருவேலையைச் செய்யமுன்வந்து அந்தவேலையைத் தன்னால் செய்ய முடியாதபோது வேறு ஒருவரைச் சகாயத்துக்கு வேண்டுகிறான். நேர்ந்த உதவியும் இவனும் அந்தவேலையைப் பூர்த்திசெய்கிறார்கள் என்றால் சகாயபுருஷன் தனக்குச் சமமானவனே தவிரத் தாழ்ந்தவனல்ல.

ஆசிரியமானேஜர்கள், முற்காலத்தில் ஊக்கமாக உழைத்தார்கள். ஏன்? அப்போது ஸ்கூல் மாணவர்களின் தேர்ச்சிக்குத் தக்கபடி கிராண்டு பெற்றார்கள். நான்காவது வகுப்பில் ஒருமாணவன் தேர்ச்சியடைந்தால் 7 ரூபா கிராண்டை ஆசிரியர் அடைகிறார். அந்தவகுப்பில் 20 பிள்ளைகள் இருந்தால் என்னவாங்குவார்கள். இக்காலத்தில் காருண்ய கவர்ன்மெண்ட் வித்தியாதிகாரிகள் அம்முறையை அடியோடுநீக்கிவிட்டு வருஷம் ஒன்றுக்கு 48 ரூபா கிராண்டு கொடுப்பதனால், ஆசிரிய மானேஜர்கள் (கிராமவாசிகள் முன் கூறியபடி) நடத்தை அழியப் பிள்ளைகள் தேர்ச்சி குறைவுபட்டது. கவர்ன்மெண்டார் அவர்கள் கிராண்டைப் பழையபடி உயர்த்திக்கொடுப் பார்களானால் ஆசிரியமானேஜர்கள் குறைகள் நீங்கப்பெற்றுக் கல்விப்பயிற் சியில் பிள்ளைகளை முன்னேற்ற மடையும்படி செய்வார்கள்.

நம்நாடு க்ஷேமம் அடைந்து முன்னேற்ற மடைவதற்கு முக்கியசாதன மானது மூலாதாரக் கல்வியே என்பது யாவரும் நன்கு அறிந்தவிஷயமாம். ஆசிரியர்கள் தகுந்தசம்பளம் பெறாமையினால் பள்ளிக்கூட வரும்படியோடு இதரமானவரும்படியில் மனதைச்செலுத்தி ஆரம்பக்கல்வியை அடியோடு சிதையும்படி செய்துவிடுகிறார்கள். ஆகையால் ஸ்தல ஆட்சியதிகாரிகளும் வித்தியாதிகாரிகளும் ஆசிரியர்கள் வறுமை நீங்கும்படி திரவியசகாயம்

செய்து ஆசிரியர்கள் சிலபஸ்படி ஏற்படுத்தியுள்ள காலநிர்ணய சட்டப்படி கல்வியைப் போதிக்கிறார்களா என்பதைக் கவனித்து வருவார்களானால் ஸ்கூல் முன்னுக்குவரும்.

ஆரம்ப ஆசிரியர்களும் ஆசிரிய மானேஜர்களும் தங்களிடத்துள்ள மும்மலங்களையும் நீக்கி முகமலர்ந்து, உதவி ஆசிரியர்களிடம் இன்சொற் கூறிச் சுயநலம் கருதாது பொதுநலம்வேண்டி, சிறுவர்களின் குணங்களைத்திருத்தம்செய்து, அவர்களுடன் கலந்து கல்வி போதிப்பார்களானால் தேசம் கல்வியில் முன்னேற்றமுற்று க்ஷேமம் அடையும். ஆசிரியர்கள்,

"தெய்வத்தா லாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்"

என்ற முதியோர் வாக்கையுன்னிப் பொதுவாகப் பாடுபடுவார்களானால் தெய்வ கடாட்சத்தினாலும் அதிகாரிகளின் அருளினாலும் உழைப்புக்குத் தகுந்த ஊதியம் கிடைக்கப் பெறுவார்கள். (தொடரும்)

கா. சு. வை.

## ஓர் வேண்டுகோள்.

ஆரம்ப ஆசிரிய மானேஜரான அன்பர்களே !

அநுபவ ஆசிரியர் என்பதின் பொருள் இன்னதென்பதையும், அநுபவ ஆசிரியர்களுக்கு அதிக சம்பளம் (பிரமோஷன்) கொடுப்பது எதற்காக என்பதையும் மூலாதாரக் கல்வியில் முதல்வகுப்புச் சிறுவர்களுக்கு எவ்வகை ஆசிரியர்கள் போதிக்கவேண்டும் என்பதையும் இவ்வானந்த போதினி மூலமாய் விளக்கமாக எழுதக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

K. S. வையாபுரிப் பிள்ளை, உதவி உபாத்தியாயர்,
போர்டுஸ்கூல், ஆதமங்கலம்.

---

## பத்திரிகாபிமானிகளிடம் கேட்கும் விண்ணப்பம்.

அன்புமிகுந்த புண்யவான்களே! அடியேன் ஒருவிண்ணப்பம். நம் ஆனந்த போதினி பிறந்து 11-வது வயதுவரை, நமக்கு வேண்டிய ஆன்மார்த்த விஷயங்களையும் உலக உபகார விஷயங்களையும் விஷயதானம் புரியும் நண்பர்களின் ஆதரவைக்கொண்டு சுயநலங் கருதாது போதித்து வந்திருக்கின்றது என்பது நாம் அறிந்த அனுபவம். அதில் நமது பத்திரிகாசிரியரவர்கள் சந்தாதார்களிடமுள்ள குறைகளைப் பல தடவைகளில் பத்திரிகை வாயிலாகத் தெரிவித்திருக்கிறார்கள். கடந்த ஆடிமாத சஞ்சிகையிலும் காணலாம். அதாவது பலர் எழுதியனுப்பும் விஷயங்களை உடனே போதினியில் வெளியிடாததை நினைத்து அடிக்கடி தகவல் கிடைக்க லெட்டர் எழுதிப் பதில் வராததைப்பற்றியும் பத்திரிகையில் வெளியிடப் பொருத்தமில்லாத சில விஷயங்களைப் பிரசுரிக்காததின் காரணமாயும் சில சந்தாதாரர்கள் பத்திரிகாசிரியரிடம் பாரபக்ஷமிருப்பதாய் அவர்மேல் குறை கூறி, சஞ்

கை தேவையில்லை என்று நேரே எழுதிவருவதாய் எழுதியிருப்பதைச் சஞ்சிகையில் பார்த்திருக்கிறோம். ஆனால் அப்படிக் குறை கூறுகிறவர்களின் நோக்கம் பத்திரிகை வாசித்து வருவதினால் ஏற்பட்ட குணமோ அல்லது வேறெவ்வித காரணமோ தெரியவில்லை. பத்திரிகை வாசிப்பதின் குணத்தைச் சிறிது இங்கே சொல்லுவோம். அதாவது நமது சிறு பருவத்தில் போதிய புத்திநுட்பம் வரும்வரை உபாத்தியாயர்களிடத்திற் சென்று அவர்கள் நமக்குத் தோன்றும்படிக்குள்ள விஷயங்கள் போதிப்பதைத் தெரிந்து வாசித்துக் கற்றுக்கொள்கிறோம். அதன் பின்னால் நம் பிதுர்காலங்களில் ஏற்பட்ட தொழிலோ அல்லது நமக்கு அபிப்பிராயப்படுகிற வேறுதொழிலோ செய்து காலக்ஷேபம்செய்துவருகிறோம். அவ்விதம் நடந்து வருவதில் நம் பழக்கம் துன்மார்க்கங்களில் செல்லாமல் நன்மார்க்கங்களில் செல்லப் பழகவேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்படிப்பழகிக்கொள்வதற்கும் புண்ணியசரித்திரங்களைக் கற்பிக்கக்கூடிய நூல்களும் நம் ஆனந்தபோதினிபோன்ற திவ்விய பத்திரிகைகளும் வேண்டியது அவசியம். இதுவரை நம் ஆனந்தபோதினி மூலமாய் எவ்வளவோ நன்மார்க்க விஷயங்களைக் கற்றிருந்தும் அற்பமான விஷயங்களைக் கொண்டு பத்திரிகை தேவையில்லை என்று சொல்வது எவ்வளவு நிர்ப்பாக்கியம். இது தானா பத்திரிகாபிமானம் என்று சொல்லப்படுவது. கைவல்யத்தில் அறுவகைச் சமாதி கூறியதில் சிரத்தையென்ற சமாதி பரம சற்குரு நூலன்பு பற்றலேயாகும் என்று சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? அந்த உண்மைக்கு விரோதமாய் உண்மைநூலைச் சிரத்தையில்லாது விட்டுவிடுவதால் ஜென்ம ஈடேற்றம் குன்றி நாம் தாழ்ந்தநிலையை அடைவோம். நாம்படித்த கல்விக்குத் தக்கபடி ஆன்மார்த்த விஷயம் பழகவேண்டியதைக் கடன் கொடுத்துவிட்டு வீண் விவாதம் செய்கிறதைக் கடைப்பிடித் தொழுகுதல் நன்றா? இதுபற்றியே சிலர்,வித்வசிரேஷ்டராய்ப் பழகியும் வீணாய் விவாதம் செய்துகொள்வதைப்பற்றி நம் பக்தசிரேஷ்ட உண்மை ஞானியாகிய தாயுமானவர் "கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் கற்றுமறிவில்லாத என், கன்மத்தை என்சொல்கேன்மதியை என்சொல்லுகேன்"என்று தொடங்கி, "வெல்லாம லெவரையும் மருட்டிவிட வெளிவந்த வித்தைஎன் முத்தி தருமோ. வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகசித்தர்கணமே" என்று முடித்துள்ள செய்யுளில் துலக்கியிருக்கிறார்.

ஆகையால் புண்ணியவான்களாகிய பத்திரிகாபிமானிகள் தயைகூர்ந்து வீணான விவகாரங்களில் நுழைந்து அதன் மூலமாய்ச் சிரத்தையை விட்டுவிடாமல் ஆனந்தபோதினி அநேக சந்தாதாரர்களுடன் நீடித்து ஆயுள் பெற்று நமக்கு வேண்டிய விஷயங்களைப் போதித்து வரும்படி செய்வார்களாக. ஆனந்தபோதினியை ஆதரித்துவரும் சிரத்தாபக்தியுள்ள கனவான்கள் யாவரும் பத்திரிகாபிமானம் குன்றாமலிருக்க, கருணாகரன் ரக்ஷிக்க வேண்டியதாய்ப் பிரார்த்திக்கிறேன்.

பால்வண்ணம்,
157, நெ. சந்தாதாரரின் குமாரர்.

## ஒரு வேண்டுகோள்.

நிகழும் குரோதனஸூ ஆடிமீ³ நமது ஆனந்தபோதினியில் பத்திராதிபர் அவர்கள் நாளது 11-ம் ஆண்டுச் சந்தாத்தொகையை வசூலிக்கும் பொருட்டுச் சென்ற ஆனிமீ³ த்திய சஞ்சிகைகளை வி-பி-மூலம் அனுப்பியதாயும், அவைகளில் சிலவற்றைச் சிலர் பெற்றுக்கொள்ளாது வாபீஸ்செய்துவிட்டதாயும் 2166 வி-பி-கள் பெற்றுக்கொள்ளாது திரும்பிவிட்டதாயும் எழுதியிருப்பதைப் பார்க்க நான் மிகவும் வருத்தமடைந்தேன். உலகத்தில் பத்திராதிபர், பத்திரிகை நடத்துவது பொதுஜன நன்மையைக் கருதியேயல்லாது இலாபத்திற்கல்ல. அதிலும் நமது ஆனந்தபோதினியில் வரையப் பெறும் விசேஷமான வியாசங்களையும் அதற்கு ஏற்படுத்திய சந்தாத் தொகையையும் நோக்கின் ஒருவிதமான இலாபத்தையும் கருதாது இது நடத்தப்படுகிறதென்பது நம்மெல்லோருக்கும் தெற்றெனத் தெரிந்த விஷயம். பத்திராதிபர் கூறும்வண்ணம் மேற்கொண்டு சந்தாதாரர்களைச் சேர்த்து அனுப்பாவிட்டாலும் வந்தபத்திரிகைகளையாவது கௌரவமாய்ப் பெற்றுக் கொள்ள வேண்டி இருக்க அங்ஙனம்செய்யாது பத்திரிகைகளை வாபீஸ் செய்வது எத்துணை நஷ்டத்தைத் தரும். வீட்டுச் செலவிற்கும், காப்பிச் செலவிற்கும், சினிமா, டிராமா முதலிய உபயோகமற்ற களியாட்டங்களுக்கும் எவ்வளவோ பொருளளிக்கும் நமது நண்பர்களுக்கு இந்த ஒரு ரூபாய் பெரிதா? இவ்விதம் அனுப்பிய சஞ்சிகைகளை வாபீஸ் செய்தால் சில நண்பர்கள் வேண்டிக்கொள்ளுமாறு சஞ்சிகையை எவ்விதம் அதிகப்பக்கங்கள் கொண்டதாகச் செய்ய முடியும். சிலர், இங்கிலீஷ் விதேச பத்திரிகைகளுக்கு விசேஷ நன்கொடைகளும் அனுப்பி போஷகர்களாகவு மிருந்து அப்பத்திரிகைகளை வெகு ஊக்கத்துடன் நடத்திவருகிறார்கள். நம்மவர்க்கு அங்ஙனம் நமது ஆனந்தபோதினியில் ஊக்கம் ஏற்பட்டிருக்கிறதா? ஆகையால் நம் ஆனந்தபோதினிச் சந்தாதாரர்கள் அனைவரும் வாபீஸ் செய்த வி-பி-களைத் திரும்பவும் தருவித்துக்கொள்வதுடன் இன்னம் தங்களால் இயன்ற உதவியும்புரியுமாறு ஒவ்வொரு சந்தாதாரர்களையும் நான் நிரம்பவும் வணக்கத்துடன் கேட்டுக்கொள்கிறேன்.

கான்சாகிப் சந்தா நெ. 19055, பரம்பக்குடி.

---

## ஆனந்தபோதினி வாழ்த்து.

(போதாதிருக்கூடற் பூமி நாதா என்றமெட்டு.)

இராகம்-பியாக்; தாளம்-ரூபகம்.

**கண்ணிகள்.**

1. ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே
ஆனந்தபோதினி ஆனந்தமே
ஆனந்தமே பரமானந்தமே—இது
ஆண்டு பத்துங்கொண்ட தானந்தமே.

2. தானந் தவநெறி காட்டிடுமே—அஞ்
ஞான விருள்தனை யோட்டிடுமே
மாநிலத் தோர்க்குண்மை நாட்டிடுமே—இது
மாபுரா ணங்களைத் தீட்டிடுமே.

3. அறத்தின் முறைதனைக் கூறிடுமே—பே
ரன்புளோர் செங்கரஞ் சேர்ந்திடுமே
சிரத்தை யுடன்பல தேசங்கடோறுமே
சென்றுலா விப்புகழ் ஆர்ந்திடுமே.

4. மாதர்க்கு நீதி நவின்றிடுமே—பொல்லா
மாயாபா சங்களை வென்றிடுமே
ஆதிநாள் பாரத நாட்டின்பழக்க
மதனைக்கைக் கொள்ளவே நின்றிடுமே.

5. நாகரீ கந்தன்னை யூட்டிடுமே—கை
ராட்டினத் தாற்பிழைப் பூட்டிடுமே
ஏக மனதுட னெம்மதத் தாரு
மிடையிற் கதர்கொளச் சாற்றிடுமே.

6. இந்திய மக்களைக் காத்திடவும்—பெற்ற
தந்தை தாயைக்கண்போற் பார்த்திடவும்
சந்தாதா ரர்க ளிருபதினாயிரந்
தஞ்சுற்ற மென்றுளம் பூத்திடவும்.

7. சந்தா வருடம் ரூபாயொன் றுக்கே—யிந்தத்
தாரணி யோர்மகி ழ்வுறைந்தே
விந்தையா னவியா சம்நிறைந்தே—யெந்த
வேளையுங் கூறிட வேசிறந்தே.

8. வேதஞ் சமயந் தமிழின் முறைகளை
வேண்டியேயிந்த நம் நாட்டினிலே
காதகரும் பொல்லாப் பாதகரும் மிகக்
கற்றிட நல்வழி காட்டிடுமே.

9. இத்யாதி நற்சிறப் புற்றமர்ந்து நாற்
பத்தெட்டுப் பக்கத்தில் வந்ததுவே
அத்தனருள்பெற்ற வானந்தபோதினி
அதிபர் முனிசாமி யாரருளால்.

10. கர்த்த னருள்பெற்றுக் கதிர்மதிபோலேயிக்
காசினி மீதவரென்றும் வாழ்க
புத்திரருஞ் சந்தா மித்திரருமிந்தப்
பூவினி லெந்நாளும் வாழ்க வாழ்க.

சந்தா நெ. 10755, அ. சுப்பிரமணிய செட்டி,
த. வெ. பொ. வெ. ஸ்டேஷன், அலங்கியம்.

# ஆனந்தபோதினியின் பதினோராவ தாண்டு
## வாழ்த்துக் கவிகள்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மலர்தலை யுலகின் மாந்தர்க ளிடையே
வழங்குறு மொழிபல அவற்றுள்
பலநயங் கெழுமிப் பண்டைநாள் தொடங்கிப்
பரமசா நித்தியம் பொருந்தித்
தலைசிறந் ததுவா மமிழ்தினு மினிதாய்த்
தமிழெனு நறும்பெய ருடைத்தாய்
நிலவுதென் மொழியா ரணங்குதன் பழைய
நேர்மையிற் குன்றுறு மிதுநாள் (1)

அன்னவ ளருமை மக்களிற் பலரும்
அவள்நிலை பொறார்மன மழுங்கி
யென்னண மவள்தன் குறைகெட லெனஆய்ந்
தினியசஞ் சிகைவழி யெனத்தேர்ந்
திந்நிலம் நிலவ விடுத்தசஞ் சிகைக
ளெண்ணில அவைகளுட் பலவு
மின்னலாய்த் தோன்றி மறைந்தன ஒழிய
மிளிர்வன ஒருசில அவற்றுள் (2)

தாரகைக் குழுவுள் தயங்குறு மதியந்
தானெனத் தனிச்சிறப் பெய்திப்
பாரக முவக்கும் படிதமிழ்ப் பாவை
பாங்கெலா மோங்குற விளக்கி
ஆரணச் சுருதி யரும்பொருள் துலக்கி
அயன்மதத் தவர்க்குமின் பருளித்
தாரணி திகழா னந்தபோ தினியாஞ்
சஞ்சிகை திறஞ்சொலப் படுமோ. (3)

ஒப்பிலா மதுரத் தமிழ்மொழி வளர
வுயர்தனி மறைநெறி வளரப்
பொற்புறு மடவார் கற்பது வளரப்
பூமிசை யருளறம் வளரத்
திப்பிய வுணர்வி னொற்றுமை வளரத்
தீரமும் வீரமும் வளரச்
செப்பிய வெழிலா னந்தபோ தினியின்
றிறனது வளரவாழ்த் துவமால். (4)

செழுந்தமி ழுலகஞ் சிறப்புறற் கரிய
சேவைசெய் தையிரண் டாண்டுங்
கழிந்தன இறைவன் கருணையி னதுபோற்
கவினுறற் றிறமுமிக் கோங்கி
விழுந்தகை யுறுமா னந்தபோ தினியிவ்
வியனிலத் தூழிபல் லூழி
தொழுந்தகைத் தமிழா ரணங்குதன் பெருமை
தொன்மையிற் றுலங்குக மாதோ. (5)

ப. வீரப்பபிள்ளை, கருவேலி,
அந்தணர்பேட்டை போஸ்டு.

# ஓர் சந்தேக வினா.

ஐயன்மீர் !

ஐந்தாம் வேதமென்று கூறப்பட்டுள்ள பாரதம் வில்லியாலியற்றிய காவியத்தில் துரோணபருவம் 13-ம் போர்ச் சருக்கம் 179-வது செய்யுள் முதல் 184-வது செய்யுள்வரை அபிமன்யு இறந்த துக்கம் பொறுது பற்குனன் சபதஞ்செய்தல் கூறப்படுகிறது. அதில் 184-வது பாடலில் சந்தேகம். அதாவது:—

வினையிலென்ம கன்றனுடல் வேறுசெய்வித் தோனைக்
குனிசிலையி னுளையுயிர் கோறல்புரி யேனேல்
மனைவியுயிர் வீயநன்ம கன்மனைவி கையால்
இனையளவு மோர்பொழுது சீவித்தவ னுவேன்.

என்ற செய்யுட்படி "சமர்க்களத்தில் எனது குமாரனது சரீரத்தையு முயிரையும் வேறு பிரித்தவனை (சயிந்தவனை)நாளை நான் எடுத்து வளைத்த தனுவின் பலத்தினுலுயிர் வேருகும்படி செய்யாமற்போனுல், தனது இல்லாள் இறந்தபின் தனது நல்ல புத்திரன் மனைவியின் கையினுல் ஒருநாளேனும் சிறிதளவு சாப்பிட்டவனடையுந் தீமையுறுவேன்" என்று கூறுகிறுன் அர்ச்சுனன். ஆயின் உலகின்மாந்தர் தம் தாரம் மாண்டபின் தம் மருமகள் கையினுலசனம் உண்ணுதல் கூடாதென்று லெவ்வண்ண முய்வது என்னுஞ் சந்தேகத்தை நமதானந்தபோதினி வாயிலாய் விளக்கியருளுமாறு கல்விமான்களாகிய ஆன்றேர்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்கின்றனன்.

ச. சின்னையா நாடார், கடலாடி.

குறிப்பு:—ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் பதிப்பில்,

"மனைவியுயிர் வீயநன் மகன்மனைவிகையால்
இனை யளவு மோர்பொழுது சீவித்தவனுவேன்"

என்றிருக்கிறது. இது எத்தேயத்தாருக்கு உடன்பாடோ தெரிகிலம். இதற்கு ஆதாரமும் கண்டிலம். ஆனுல் வேறு (மதுரை சங்கப்) பதிப்பில்,

"மனைவியய லான்மருவல் கண்டும வள்கையால்
இனையளவு மோர்பொழுது சீவித்தவனுவேன்"

என்றிருக்கிறதாகத் தெரியவருகிறது. இப்பாடமே சரியெனத் தோன்றுகிறது. இதனை நன்குணர்ந்தோர் வெளியிடின் நலமாம். ப.ரி.

---

# வினுவுக்கு விடைதேவை.

நேயர்களே ! கீழ்க்கண்ட வினுவுக்கு எவர் முதலில் பொருத்தமானபதில் அளிக்கின்றுரோ, அவருக்கு இனுமாக, ஆனந்தபோதினி ஓராண்டுக்கு தருவித்துக் கொடுக்கப்படும்.

விடைதருவதற்கு உதவிகள்.

1. மூன்று எழுத்துக்கள் பொருந்திய ஒரு ஊரின் (க்ஷேத்திரம்) பெயர்.

2. முதலெழுத்து இடையினம். நடுவெழுத்து வல்லினம், ஈற்றெழுத்து மெல்லினம்.

3. முதலெழுத்தை நீக்கிவிட்டால் மன்னனைக்குறிக்கும் ஒருசொல்; இடையெழுத் தில்லாவிட்டால் கானில் திரியும் ஒருவகைப்பிராணி; கடையெழுத்து இல்லாவிட்டால், ஒருவகை இனிப்பான ரசபதார்த்தத்தைக் குறிக்கும் ஒருசொல். அவ்வூர்தற்போது பழைய நகரம்.

ம. அ. அபுபக்கர் ராவுத்தர், தஞ்சை.

குறிப்பு:—இவ்வினாவுடையார், இதற்கு முதலில் விடைதருவோர்க்குத் தாமே ஒருவருடப்பணம் கட்டி நம் ஆனந்தபோதினியை 1வருஷத்துக்கு அவருக்கனுப்பும்படி செய்வாராம். ப-ர்.

---

## "ஒற்றுமை"

ஐயன்மீர் !

"ஒற்றுமையில்லாக்குடும்பம் ஒருமிக்கக் கெடும்"
"சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை"
"எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்"

என்ற, இத்தகைய மேற்கோள்களெல்லாம், ஒற்றுமையின் பொருட்டே உதித்தனவாகும். எல்லாம் வல்ல இறைவனியற்றிய இப்பிரபஞ்சத்திலுள்ள * சராசரங்கள் அனைத்திற்கும், ஒற்றுமை என்பது இன்றியமையாதது. அதனாலுண்டாம் நன்மைகள் பல. ஆகவே, மானிடர்கள் ஒவ்வொருவரும் பந்துத்வம், பட்சம், பாசம், நேசம், விசுவாசம், அபிமானம், காதல், பக்தி, என இடபேதத்தை நோக்கிப் பலவகைகளான பெயர்களுடன் செலுத்தப்படும் அன்பைச் சற்றும் குறைவுறாது, செலுத்துவார்களேயானால், ஒற்றுமை என்பது தானே உதிக்குமென்பதற் கையமில்லை.

இத்தகைய ஒற்றுமை, மானிடருக்கு மாத்திரம் உண்டா? உலகத்தில் தோன்றிய மற்ற இயற்கைப்பொருள் முதலானவற்றிற்கு முண்டா? என்பதை சிறிதளவு ஆராய்வாம். முதலில் தாவரத்தைப் பற்றிக்கூறுவோம்:

ஆலமரத்தின் கிளை ஒற்றுமையைக் காணின், நமக்குப்பெரும் வியப்பு தோன்றும். எவ்வாறெனின், மீன்சினையினும் சிறிதாயுள்ள ஒரு ஆலின் விதையானது முளைத்துப் பெரிய தருவாகித் தரும் விழுதுகள் பலநூல் போன்ற கிளைகளாக உதித்துக் கீழிறங்கிப் பூமியை எட்டிய உடனே அவையனைத்தும் ஒற்றுமை யடைந்து, வேரூன்றித் தம்முன் தோன்றியனவாகிய கிளைகளைத்தாங்கி அவைகளுக்கு உதவிசெய்கின்றன. இவற்றின் இனவொற்றுமையை என்னென்றியம்புவது ! சிறு சல்லிகளாகிய இவ்விழுதுகள், தங்களால் சுமக்கமுடியாத அத்தகைய கிளைகளின் பாரத்தைச்

---

* அசைவன, அசையாமலிருப்பன.

சுமப்பதற்குக் காரணம் என்ன? ஒற்றுமையே யன்றோ? இதை ஊகித்தறிய வேண்டிய தவசியமன்றோ? பின்னும்,

விருக்ஷத்தை நீக்கி விலங்கினை நோக்குவாம்; இரண்டு எருதுகள் சேர்ந்து, ஒருவண்டியினை இழுத்துச் செல்லுங்கால், அவற்றின்பா லுள்ள ஒற்றுமையைக் கண்டறியார் ஒரு சிலருமிரார் என்பது வெளிப்படை.

நிற்க, புள்ளினத்தை நோக்குவாம்: "ஆகாயத்தோட்டி" எனப்பெயர் புனைந்த காகமானது, தனக்கு ஆகாரம் கிடைக்கும்போது தனது இனத்தின் கூட்டத்தைப் பேரிரைச்சலிட்டு ஒருங்குபடத் திரட்டி அவற்றிற்கும் அதனை ஊட்டி உண்ணுவதைப் பார்க்காதவர் யாவர்? புறா என்னும் பறவையானது தன் துணையுடன் இணைபிரியாது இசைந்தொழுகும் குணத்தினை என்னவென் றியம்புவது? கொலைஞனொருவன் தனது கொடிய ஆயுதத்தால் ஒரு புறாவை உயிர்துறக்கச் செய்யுங்கால் அதை நீங்கின மற்ற புறாவானது தானே உயிர் துறக்குமென்பதை நாம் எல்லோரும் கேட்டேயிருக்கின்றோம். மற்றும்,

குரங்குகள் என்று சொல்லக்கூடிய பிராணிகள் ஒருமரத்தில் இருக்கும்போது, ஒருவன் ஒருகுரங்கைப் பார்த்துப் பயமுறுத்துங்கால் அது கண்ட பல குரங்குகளும் அன்னவனை உறுமுவதை நோக்கின் அவற்றின் பாலுள்ள ஒற்றுமை நன்கு தெளிவாகின்றது. சமீபகாலத்தில் ஈரோட்டில் நடந்த குரங்குகளின் ஒற்றுமையை நமது ஆனந்தபோதினி பகரக்கேட்டிராதவர் யாவர்? ஆகவே, சகோதர சகோதரிகளே!

இப்படி எல்லா இனங்களுள்ளும் நிறையப்பெற்ற ஒற்றுமை யானது, நம் பரதகண்டத்தில் முன் எவ்வாறிருந்தது என்பதைக் கூறுவோம். கேட்பீராக. சூரியகுலத்தைப் பாருங்கள்; ஸ்ரீராமர் வனமேகப் புறப்பட்டதும், கற்பிலக்கணம் வாய்ந்த மனைவியாகிய சீதாதேவியும், ஒற்றுமையே உருவாகத்தோன்றிய தம்பியாகிய இலக்குமணனும் பின்தொடர்ந்ததும், இதைக்கண்ட தசரதர் உயிர் நீங்கினதும், அந்நகரின் ஜனங்கள் யாவரும் இராமபிரானைப் பின்தொடர்ந்ததும், ஓடக்காரனாகிய குகனின் அன்பும், நினைத்துப்பார்க்கில் எவ்விடத்திலாவது ஒற்றுமை என்பது குன்றியதாகக் காணப்படுகிறதா? இல்லையே!

மற்றும், சந்திரகுலத்தை நோக்கின், பாண்டவரின் ஒற்றுமை எவரிடத்துண்டு? இவ்வாறு ஒற்றுமையே உருவாகத்தோன்றிய நம்தாய் நாடானது தற்போது ஒற்றுமை என்பது சற்று வேற்றுமை யடைந்திருப்பது மிகவும் வருந்தத்தக்கதாகும். நம்பாரதமாதாவின் மக்களனைவரும் ஒருதாயின் பிள்ளைகளாக ஜனித்து, மதம் பாஷை உடை நடை குணம் பாவனை முதலியவற்றில் சிறிது மாறுபாடடைந்ததால் நமக்குள் ஒற்றுமை என்பதும் சிறிது மாறுபாடடைய எது உண்டானதுபோலும். அதுமிகவும் நன்றன்று.

இனி நந்தமிழ் மக்களனைவரும் மதத்துவேஷம், குலத்துவேஷம், குடும்பத்துவேஷம், தேசத்துவேஷம், இராஜத்துவேஷம் என்ற இத்

தகைய துற்குணங்களெல்லாம் ஒழித்து முறையே துவேஷம் என்றசொல் "அபிமானம்" என்றுமாறும்படி நடந்தொழுகி இப்பாதகண்டத்தை முன்னிருந்த உயர் பதவிக்குக் கொண்டுவரும்படியான நல்லறிவைப் பெறுமாறு எங்கும் நிறைவுற்ற எம்பெருமான் இனிது கிருபை கூர்ந்தருளப் பிரார்த்தித்து வணங்குவாம். குறையிருப்பின் உலகம்பொறுக்க.

"ஒற்றுமைக்கொடியை உலகத்தோர் நாட்டுக."

S. பூர்ணம் பிள்ளை, துறையூர்.

---

## இல்லறம்—கல்வி.

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

சர்வபரிபூரண வகண்டதத்துவமான சச்சிதானந்த சொரூபியின் மகிமையையும், அகிலாண்டகோடி யனைத்தையுங் கருப்பமாயப் பெற்றும் கன்னியாகவே யிருக்கிறாளென வேதங்கள் கழறுகின்ற உலகமாதாவாகிய பராசத்தியின் பெருமையையும் வெள்ளிடை மலைபோற்றெள்ளிதிற் புலப்படுத்து மிவ்வழகிய பாருலகின்கண்ணே ஆன்மாக்களெடுக்கும் எழுவகைப் பிறப்பிலும் 'அரிது, அரிது மானிடராதலரிது." ஏனெனின் மானிடப் பிறப்பெடுத் தன்றி மற்றெப் பிறப்பினின்றும் மோட்சமடைதலரிதினுமரிதாகும். மானிடப்பிறவி யெடுத்த மாத்திரத்தில் மோட்சம் சித்திக்குமா? அன்று! அன்று! மேற்கூறிய எழுவகைப் பிறவியும் திரும்பவும் இவ்வோர் பிறவியாகிய மானிடப்பிறவியி லிருப்பது திருட்டாந்தம். ஆகையால் உண்மையான அரியமானிடப் பிறவியெடுத்த ஆன்மாவானது, "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்னும் பொய்யாமொழியார்வாக்கியத்திற்கிணங்க, வேதசாஸ்திர புராணேதிகாசங்களை ஐயந்திரிபறக்கற்றுணர்ந்து அவற்றின்வழி நின்று, நற்கதியடைந் துய்தலையே தன்சீவியத்தின் இலக்காகக்கொண்டு, இறுதியில் ஏனையோர் யாவராலும் எய்தற்கரிய பெரும்பேறாகிய மோட்ச வின்பத்தையடையும்.

கல்வியைக் கசடறக் கற்றபின் நிற்கும் நிலைகள் இல்லறம், துறவறமென இருவகைப்படும். இல்லறமோ துறவறமோ மேலானதென அநேகர் வாது புரிகின்றனர். இதுவேதாந்தமோ சித்தாந்தமோ மேலானதெனவாது புரிவதற் கொப்பாகும். ஏனெனில் இவ்விருவழியில் எவ்வழிச் சென்றாலும் இறுதியில் சென்றடையுமிடம் ஒன்றேயாம். அன்றியும் நாம் மேற்கூறிய செய்யுள் இவர்கள்வாது வீண்வாதெனவும் கல்வியினால் கசடற்ற அறிவிற்சிறந்தோரது மனோநிலை யெவ்வழியோ அவ்வழியே மேலானதெனவும் விளக்குகின்றது. நம்முன்னோ ரநேகர் இல்லறவழி நின்றே துறவறமெய்தி முக்தியடைந்தன ரென்பதும் நாமறியக் கிடக்கின்றது. இது பற்றியே ஔவைப் பிராட்டியாரும் "இல்லறமல்லது நல்லறமன்று" என்றும்,

" ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு " என்றும்

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு புருஷார்த்தங்களில் முன்னைய மூன்றும் இல்வாழ்வானுக்கும், அவற்றையனுபவித்து, வெறுத்து விட்டுத் துறவடைந்தவர்க்கே பேரின்ப வீடாகிய மோட்சம் சித்திக்குமென்றும் கூறியுள்ளார்.

ஆகையால் மோட்சசாதனத்தின் முற்கூறாகிய இல்லறம் நடாத்தித் துறவடைந்து பெறுதற் கரியபெரும் பேறாகிய முத்தியின்பத்தைப் பெறுதற்கு நமக்குப் பேருதவிபுரிபவரும் இன்றியமையாத் துணையாயுள்ளவரும் அதனால் தாமும் அம்முத்திப் பேற்றை யடைபவருமாயுள்ளவர் நம் பெண்மணிகளாவர்.

" மருவிய காதன் மனையாளுந் தானும்
இருவராய்ப் பூண்டேர்ப்பி னல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று "

என்னும் செய்யுளின்படி கணவன் மனைவியாகிய இருவரும் ஏகசித்தராய் ஆசை கோபம் லோபம் பொறாமை முதலியவற்றைத் தவிர்த்துச்சகல பிராணிகளிடத்தும் அன்பும் அனுதாபமும் நிறைந்தவர்களாய் பஞ்சபுலன்களாம் மதயானைகளை அறிவென்னும் அங்குசங் கொண் டடக்கித் தான தருமங்களையே தங்கள் முக்கியகடமையாய்க் கொண்டு, குருலிங்கசங்கம பக்திகளிற் சிறந்து கல்வி கேள்விகளில் விருப்புடையோராய் சித்தத்தை இறைவன்பால்வைத்து, இல்வாழ்க்கை யென்னும் வண்டியை நெறிதவறாது செலுத்தி, பிறவிப் பெருங்கடலைத் தாண்டி அது அடையுமிடமாகிய நித்தியானந்தப் பெரும்பேற்றை யடைதற்குப் பேருதவிபுரிவது கல்வியே யாகும். அதுவே,

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூஉங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

ஆயினும் தற்காலம் நாமும் நம்மாதரும் ஈண்டுக்கூறிய நோக்கத்தோடு கல்வி கற்கின்றோமில்லை. நாமோ மீண்டும் மீண்டும் வினையைச் சம்பாதிப்பதற்கும் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்துழல்வதற்கும் உதவிபுரியுங் கல்வியையே விரும்பிக் கற்கின்றோம். நம்மாதரோ கேவலம் " விவாகவியாபாரார்த்த " மான கல்வியைக் கற்கின்றனர். ஆகையால் நமது கல்வி ஆன்மார்த்த கல்வியன்றி இலௌகிக கல்வியாயின் அதனால் இறுதியில் நாமடையும் பயன்யாது? அறிவு சொரூபியாம் ஆன்மாவை மூடியிருக்கும் அந்த

காரமாமிருளை நீக்குவதும், ஈசுரபக்தியையும் சீவகாருண்யத்தையும் தருவதும், நம்மிலுள்ள தீயொழுக்கத்தைத் தவிர்த்து நல்லொழுக்கத்தை விருத்திசெய்வதுமாகிய கல்வியின்றேல் நாம்கற்றதனாலாய பயன்யாது? இதுபற்றியே

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்"

எனத்தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார் கூறியுள்ளார்.

"படித்தல் கஷ்டம்; அதனிலுங்கஷ்டம் பழக்கந் தவிரப்படித்தல்" என ஆங்கில பண்டிதரொருவர் கூறுகின்றார். இது இந்துசமயிகளுக்குப் புதியதல்ல. இதுவும் இதுபோன்ற அநேகதிவ்ய போதனைகளும் சமயநூல்களில் பரக்கக்காணலாம். ஆனால் நாம் செய்யவேண்டிய தொன்றுண்டு. அதாவது ஆன்மலாபமென்னும் பெருந்தாகங்கொண்டு எப்பாஷை, எச்சமய நூல்களைப் படிக்கினும் நீருடன்கலந்த பாலை அந்நீரினின்றும் வேறுபடுத்தும் அன்னப்பட்சியைப் போன்று அவற்றிலுள்ள இரத்தினங்களாகிய நற்போதனைகளை எடுத்து நம்பழக்க வழக்கங்கள்மீது பிரயோகித்து நம்மைத்திருத்தி நன்னெறி நிற்றலே சிலாக்யம். இதுவே கற்றதனாலாய பயனுமாகும்.

நம்பெண்மணிகளின் கல்வியினாலுண்டாகும் பெரும்பிரயோசனத்தை நம்மவரநேக ருணர்கின்றாரில்லை. அவசியமானபோது பெண்மக்கள் தம் கணவருக்கு ஆபத்துவேளையி லறிவுசொல் மந்திரி என்பதுபோல் நல்ல யுத்திபுகட்டவும், தமது கற்பைக்காக்கவும், மிகவும் முக்கியமாய் நமது பின்சந்ததியாராம் புத்திரர்களை நற்பழக்க வழக்கங்களோடும் கல்வியூட்டிச் சுகாதார முறைப்படிவளர்த்து வீரதீரர்களாக்கவும், இல்லறத்தின் முக்கிய பாகத்தை வகிப்பவர்க ளாகையால் அதைக்குறைவற வழுவாது நிறைவேற்றவும் கல்வி யின்றியமையாததன்றோ. நல்லொழுக்கச் செயலைக்கண்டு,

"அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் கடவாத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
என்றூங்கு மென்க ணிரா"

எனப் புலவர் பெருமான் தம்பத்தினியாரை மெச்சினர். அன்றியும், ஓர் குடும்பத்தில் பிதாமாதாக்களது கல்வியறிவு ஒழுக்கங்களெவ்வாறோ அவ்வாறே புத்திரருமாவர். "தந்தையெவ்வழி மைந்தனவ்வழி", "தாயைப் போலப்பிள்ளை நூலைப்போல் சீலை" யென்னும் பழமொழிகள் இதற்குச் சான்றாகும். இதுவே சாஸ்திரங்களின் கூற்றும் அனுபவ சித்தாந்தமுமாம். தற்காலம் நம்பெண்மணிகள் ஆங்கிலம் அரைப்படிப்புத் தமிழ்காற்படிப்புப் படித்துவிட்டு அதுவோ இதுவோ எதுவோவென்று தெரியாமலும் என்ன செய்வதென் றறியாமலுந் தத்தளிக்கின்றனர். தந்தையரும் அவரைக்கசடறக் கற்பிக்கப் பணச்செலவாகுமென அஞ்சுகின்றனர். இவர்கள் "அறியாமையின் செலவு கல்வியின் செலவிலும் பார்க்க அதிகம்" என்பதை யறி

யார்போலும். ஐரோப்பியரை இவ்வளவு உந்நதபதவியில் வைத்தது ஆண் பெண்ணிருபாலாரது கல்வியன்றோ. ஆனால் அவர்கள்கல்வி பெரும்பாலும் இலெளகிக கல்வியாகும். அவர்களி லநேகர் பழக்கந்தவிரப் படித்தாரில்லை. தமிழகம் தொன்று தொட்டு ஆன்மார்த்த கல்வியையே விருத்திசெய்து வந்ததாயினும் தற்காலம் ஆங்கிலக் கல்வி யதற்கு அநேகங் கெடுதிகளைச் செய்துகொண் டிருக்கிறது. இலெளகிக சம்பந்தமான ஆங்கிலக்கல்வி தற்காலம் உந்நதபதவிவகித்திருப்பதாக நமக்குப் புலப்படின் ஆன்மார்த்த கல்வியாம் தமிழ்க்கல்வி அதனிலும் பதின்மடங்கு உந்நதமான பதவியை வகிக்கு மென்பது சொல்லவும் வேண்டுமோ? தற்கால கல்வியோ பெரும்பாலும் அறியாமையை வளர்ப்பதன்றி அறிவை வளர்ப்பதில்லை. "அறியாமை கடவுளின்சாபம். அறிவோ நம்மை மோட்சத்திற்கு எடுத்துச்செல்லும் சிறகுகள் போன்றது" என ஆங்கிலபண்டிதர் கூறுகின்றார். அவரே "எம்புத்திரரநேகர் வறுமையின் புதல்வர்களா யிருக்கிறார்கள்; ஆனால் அவர்கள் அறியாமையால் வளர்க்கப்படாதபடி நாம் பாதுகாக்கவேண்டும்" எனக்கூறுகின்றார். இவற்றால் அறிவிற்கும் அறியாமைக்கு மிடையிலுள்ள பெரும் வித்தியாசமும், அறியாமையை நீக்கி யறிவைவளர்க்க உதவுவது கல்வியென்பதும், அதனிலும் மனிதவர்க்கத்தின் ஈடேற்றத்திற்கு இன்றியமையாததாயுள்ளது, பிதாமாதாக்களாம் ஆண்பெண் ணிருபாலாரது கசடற்ற கல்வியென்பதும் நன்கு விளங்குகின்றன.

நம்புத்திரர் அறியாமையால் வளர்க்கப்படாது பாதுகாப்ப தெப்படி? அவர்கள் வறுமையின் புதல்வர்களா யிருப்பதால் அறியாமையே யவர்களின் தாயாகவேண்டும். ஆனால் இச்சங்கடத்தை நீக்க ஓர்வழியுண்டு. அதாவது, நம்நாட்டுப் பரோபகாரிகளும், தர்மசிந்தை யுடையோரும், ஜீவகாருண்ய முடையோரும் முன்வந்து ஒவ்வொரூரிலும் வாசகசாலைகளும், இராப்பாடசாலைகளும் உண்டாக்கிப் பெரியோரும் சிறியோரும் தங்கடங்கள் சாவகாசப்படி அவ்விடஞ்சென்று கற்பதற்கேற்ற ஒழுங்குகள் செய்து அவர்களை உற்சாகப்படுத்த வேண்டும். "தானங்கள் அனைத்திலும் கல்வித்தானமே மேலானது" என ஆங்கிலபண்டிதர் கூறுகின்றார். இதுவே நம் நூல்களின் கூற்றுமாகும். நம் பெண்களுக்கு ஆனந்தபோதினியே தகுந்த ஆசிரியனாகும். வருஷம் ஒன்றுக்கு நூறு ரூபா சம்பளங் கொடுத்து ஓர் ஆசிரியனை அமர்த்திக் கொண்டாலும் நம் ஆனந்தபோதினி ஒரு ரூபாவோடு கற்பிக்கும் கல்விக்கு நிகராகாது. ஆதலால் ஆனந்தபோதினியின் சந்தாநேயர்களாகிய நாமொவ்வொருவரும் நாளொன்றுக்கு (ஒரு சுருட்டுக்குச் செலவழிக்கும்) ஒரு தம்படிவீதம் உண்டிசேர்த்தால் வருஷாந்தத்தில் ஆனந்தபோதினியின் ஒருவருஷசந்தாத்தொகைக்கு அதிகமாகவேசேர்ந்து விடும். இத்தொகையைக் கொண்டு நாமொவ்வொருவரும் ஒவ்வோர் வறிய பெண்பிள்ளைக்கு ஆனந்தபோதினியை வாங்கிக்கொடுத்து வாசிக்கும் பாக்கியத்தை உண்டாக்கி விடலாம். நாமிருபதினாயிரவர் ஒவ்வொருவரும் ஒவ்

வோர்வறிய பெண்பிள்ளைவீதம் இருபதினாயிரம் வறிய பெண்பிள்ளைகளுக்குக் கற்பிக்கக்கூடுமானால் தமிழகந் தழைத்தோங்குவதற்குச் சந்தேகமுண்டா? ஆதலால், ஆனந்தபோதினியை நம்சிறுவர் முதல் வயோதிகர் வரை யாவரும் வாசிக்கவும், கல்வியாங்கடல் கரைபுரண்டு அலைகளை வீசித்தமிழகம் முழுமையும் பரவவும், அதனால் அறியாமையாம் அந்தகார வெப்பம் அடங்கி யவிந்தற்றுப்போய் நல்லறமா மில்லறந் தழைத்தோங்கி நிற்கவுங்கூடும். பின்னும் அவ்வறத்தால் இயல்புடைய மூவர்க்கும் நாம் துணையாக நின்று ஆன்ம ஈடேற்றத்தை யடையலாம். அத்தகைய பேற்றைத் தருவதாகிய இவ்வரும் பெருந்தொழிலை நாமனைவருஞ் சிரமேற் கொள்வோமாக.

“ வெள்ளத்தா லழியாது வெங்கனலால் வேகாது வேந்தர்க்கெல்லாங்
கொள்ளத்தான் கிடையாது கொடுத்தாலும் நிறைவொழியக் குறைவோ
கள்ளர்க்கோமிகவரிது காவலர்க்கோ மிகவெளிது கருணையான [வில்லை
உள்ளத்தேபொருளிருக்க உலகெல்லாம் பொருள்தேடியுழல்கின்றாரே.”

ஆ. சி. ஆறுமுகம், கெக்கரியா, இலங்கை.

---

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(64-ம் பக்கத் தொடர்ச்சி.)

### “ சனி நீராடு ”

“ சனி-சனிக்கிழமை தோறும், நீராடு-(நீ எண்ணெ யிட்டுக்கொண்டு) நீரில்மூழ்கு ” என்பது இதன் பொருளாம்.

நம் நாட்டிலுள்ளவர்கள் வாரம் ஒருமுறை தைலஸ்நானம் செய்து கொள்ளுதல் பண்டைக்காலந்தொட்டு நடந்துவரும் வழக்கமாகும். இஃது இந்நாட்டின் சீதோஷ்ண நிலைக்குத்தக்கபடி மனிதர் சுகமடையும்பொருட்டுப் பெரியோர்களால் சாஸ்திரங்களில் வகுக்கப்பட்ட விதியாகும். ஒரு வருடத்தில், இரண்டிரண்டு மாதங்கள் கொண்ட அறுவகைப் பருவங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவை: கார், வாடை, முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பனவாம். இவற்றுள் ஆவணி புரட்டாசி கார்காலம், ஐப்பசி கார்த்திகை வாடைக்காலம், மார்கழி தை முன்பனிக்காலம், மாசி பங்குனி பின்பனிக்காலம், சித்திரை வைகாசி இளவேனிற்காலம், ஆனி ஆடி முதுவேனிற் காலம். இக்காலங்களில் சீதோஷ்ண நிலைகள் மாறுபடுவது இயற்கை; அவற்றிற்குத் தக்கபடி மனிதரின் தேகஸ்திதியும் மாறுதலடையும். இந்த மாறுதலால் வாத பித்த சிலேஷ்மங்கள் மிகுதலும் குறைதலு முண்டாய் மனிதர்தேகத்தில் இயற்கைக்கு விரோதமான சம்பவங்களும், பிணிகளும் மாறிமாறிவரும். இவ்வகைமாறுதல்களை நீக்கிப் பிணிகள் சாராமல் தேகத்தை நல்ல இயற்கையில் வைத்துக்கொள்ளும் பொருட்டு ஒவ்வொரு பருவத்தின் முடிவிலும் விரேசனம் முதலிய வைத்தியங்களை

மனிதர் செய்துகொள்ள வேண்டுமென்று வைத்திய சாஸ்திர நிபுணர்கள் கூறுகின்றனர். அவர் கூறும் சாஸ்திரங்களில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஒவ்வொருவகைச் சிகிச்சை கூறப்பட் டிருக்கின்றது. எனினும், எண்ணெய்ஸ்நானம் எல்லாப் பருவங்களிலும் செய்யத்தகுந்த தென்றும், எப்பருவத்திலும் அது மனிதர்தேகத்தை நல்லநிலையில் வைக்கக்கூடிய தென்றும் அறிஞர் கூறுகின்றனர். இங்ஙனம் இஃது எப்பருவத்திலும் சுகந்தரக்கூடியதா யிருப்பதால் இந்த எண்ணெய் ஸ்நானம் செய்பவர்களுக்கு வேறு வைத்தியன்துணை அவசியமில்லை என்றும் சில பண்டிதர் செப்புகின்றனர். இதையனுசரித்து, "வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக் கொடு" என்னும் பழமொழியும் நம் நாட்டில் வழங்குகின்றது. இதைப் பெரும்பான்மையான ஜனங்கள் அனுஷ்டித்துச் சுகம்பெற்று வருகின்றார்கள்.

இவ்வாறு அனுஷ்டித்து வருவதில் சிலர் தேகநிலைக்கும், காலநிலைக்கும்,ஆசாரநிலைக்கும் தக்கபடி வாரம் ஒரு முறையை இரண்டுமுறையாக்கிச் சனி புதனிலும், அதிகநாள் கடந்து நினைத்த கிழமையிலும், ஸ்நானஞ் செய்து வருகின்றனர். இன்னும், பெண்கள் ஸ்நானத்துக்கு வெள்ளியும் செவ்வாயும் பொருந்தியவை யெனவும், புருஷருக்கும் குழந்தைகளுக்கும் விதவைகளுக்கும் சனியும் புதனும் பொருந்தியவை யெனவும் பலபாகுபாடுகளையும் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். மலையாளநாட்டிலுள்ளவர்கள் தினந்தோறும் தைலத்தைச் சிரசில்தடவி ஸ்நானஞ்செய்யும் வழக்கத்தை மேற்கொண் டிருக்கிறார்கள். மேல்நாட்டில் எப்பொழுதும் குளிரே மிகுந்திருப்பதால் அந்நாட்டினர் எப்பொழுதுமே எண்ணெய் ஸ்நானத்தை அவசியமானதாகக் கொள்வதில்லை.

நம்முடைய நாட்டினர் மேற்கூறிய காரணங்களைக் கொண்டு எண்ணெய் ஸ்நானத்தை முக்கியமானதாகக் கருதிச் சிற்சிலபாகுபாடுகளுடன் அனுஷ்டித்து வந்தபோதிலும், ஸ்நானத்திற்கு வேறு பல தைலங்கள் ஏற்பட்டிருந்த போதிலும், எள்ளின்தைலம் பலவகையிலும் தேகத்திற்குச் சுகத்தைக் கொடுக்கக் கூடியதாதலாலும், எள் சனிக்கிரகத்திற்குகந்த நவதானியங்களுள் ஒன்றாதலாலும், பிதுர்கர்மங்களுக் குரியதாதலாலும் அதன் தைலமாகிய எண்ணெயைச் சிரசிலிட்டுச் சனிவாரந்தோறும் ஸ்நானஞ்செய்து வந்தால் தேகசுகம் கிடைப்பதோடு, சனிக்கிரகதோஷ நிவிர்த்தியு முண்டாகுமெனப் பெரியோர்களும் சாஸ்திரங்களும் கூறுகின்றபடியால் சனிக்கிழமையில் எண்ணெய் தேய்த்து ஸ்நானஞ் செய்தலே பெரும்பான்மையும் சிறந்ததெனப் புத்திமான்கள் கருதி அவ்வழக்கத்தை மேற்கொண்டு வருகின்றார்கள். எள் சனிக்குப் பிரீதியென்பதை, ஜனங்கள் கிரகதோஷ நிவிர்த்தியின் பொருட்டுச் சனீசுரன் கோவிலில் எள்ளைப் பொட்டணங்கட்டி எண்ணெயிற்போட் டெரியவிடுவதாலும், வேறுபல காரணங்களாலும் தெரிந்துகொள்ளலாம். இங்குக்கூறிய ஒவ்வொன்றையும்

விரிக்கப்புகின் அவைபெருகும். பொதுவாக நோக்குமிடத்து நம் நாட்டினர் சனிக்கிழமைதோறும் எண்ணெய் ஸ்நானம்செய்தல் சிறந்ததென்பது விளங்கும். நெடுங்காலமாக நாட்டுப்புறத்துத் திண்ணைப் பள்ளிக்கூடச்சிறுவர்கள் சனிக்கிழமைதோறும் உபாத்தியாயருக்காக வீடுகள்தோறும் எண்ணெய்வாங்கி வருவதும், அதற்கு 'சனியெண்ணெய்' என்று பெயரிட்டு வழங்குவதும் இதனைத் தெளிவுபடுத்தத் தக்கனவாம். இவ்வகைக்காரணங்களைக் கொண்டே நம்மூதாட்டியாராகிய ஔவைப் பிராட்டியார் ஜனங்கள் அனுஷ்டித்துச் சுகம்பெறும் பொருட்டு, "சனிநீராடு" என்று கூறினர். இந்நீதியைக் கடைப்பிடித்தே நம் தேசத்தவர் சனிக்கிழமை தைல ஸ்நானத்தை விசேஷமாகக் கொண்டாடி வருகின்றனர். அன்னிய நாட்டாசாரங்களை மேற்கொண்டு, புதியநாகரிக மென்னும் இருளில் புகுந்தார்சிலர் நம்பெரியோர் வகுத்த பண்டைய வழக்கங்களை அநாகரிகமெனத்தள்ளி அவஸ்தைப்படுகின்றனர்.

ஒரு நகரத்தில் பொன்னப்பபிள்ளை கண்ணப்ப உடையார் என்ற இரண்டு நண்பர்கள் ஒருசாலை மாணவராய் ஆங்கிலம்பயின்று வந்தார்கள். இவர்களுள் கண்ணப்ப உடையார் பரம்பரையாகவந்த ஐசுவரியமுள்ள பெரியகுடும்பத்தி லுள்ளவர். பொன்னப்பபிள்ளை நூதனமாகவந்த சொற்ப ஐசுவரியமுள்ள குடும்பத்திற் பிறந்தவர். கண்ணப்ப உடையார் அடக்கம், விவேகம், தெய்வபக்தி, குருபக்தி, தாய்தந்தையர் பக்தி, பெரியோர் சிநேகம், சுயபாஷாபிமானம், சுதேசாபிமானம் முதலிய நற்குணங்களுடையவர். பொன்னப்பபிள்ளை யோதற்பெருமை, பெரியோர் அவமதிப்பு, சுயபாஷை வெறுப்பு, அன்னிய நாட்டாசாரக் கல்வி விருப்பு, மூர்க்கம் முதலிய துர்க்குணங்களைப் பொன்னைப் போலப் போற்றக்கூடியவர். கண்ணப்ப உடையார் உயர்ந்த பரீக்ஷைகளில் தேறி முன்சீப்பு உத்தியோகம்பெற்றார். பொன்னப்பபிள்ளை ஸ்கூல் பைனலில்கூட தேறவில்லை. அதனால் இவருக்கு ரெயில்வே கம்பெனியில் கிளீனர்(இஞ்சின் துடைப்பவர்) வேலைதான் அகப்பட்டது. கண்ணப்ப உடையார் பெரிய உத்தியோகத்தி லிருந்தாலும் நம் நாட்டாசாரங்களை விடுவதில்லை. நம் நாட்டுடைகளையே உடுத்துவார்; சுதேச ஆகாரங்களை உண்ணுவார்; ஸ்நானபானம் முதலிய எல்லாவற்றையும் நம்நாட்டு வழக்கம்போலவே செய்துகொண்டுவந்தார். அதனால அவர், முன்னிலும் செல்வவந்தராய்ச் சரீரசௌக்கியத்துடன் விளங்கிவந்தார். பொன்னப்பபிள்ளை கிளீனர் வேலைபார்த்து வந்தாலும் அன்னியநாட்டாசாரப்பேய் அவரைப்பற்றிக்கொண்டது. தம்மை ஓர் ஐரோப்பியரென்றே தீர்மானித்து விட்டார். மேல்நாட்டு உடைகளையே அணிந்துவந்தார். அன்னியநாட்டு ஆகாரங்களாகிய ரொட்டி முதலியவற்றையே உபயோகிக்கத் தலைப்பட்டு விட்டார். ஒவ்வொரு காரியங்களிலும் மேல் நாட்டார்களைப் போலவே நடிக்க ஆரம்பித்துவிட்டார். எவரோடு பேசினும் மிகுதியும் ஆங்கிலமே பேசுவார். வேலைக்குப் போகுங்காலத்தி லெல்லாம் ரெக்ஷா (ஆளிழுக்கும் வண்டி) மீதே ஏறிப்போவார். இப்படி வெகுகெம்பீரமாகப்

போய் இவர்செய்யும் வேலை, உடுப்பெல்லாம் கரியாகும் கிளீனர் வேலை தான். இந்த நூதனப் பழக்கங்களால் இவருக்கு அளவுக்கு மிஞ்சினசெலவு ஏற்பட்டுக்கொண் டிருந்தது. இவர் செலவுக்கு வரும்படிபோதாமல் கட னுக்குட்பட்டும் வந்தார். என்ன கடன் கஷ்டங்கள் நேர்ந்தாலும் இவர் தமக்கு நூதனமாகப் பிடித்த புதுப்பயித்தியத்தை விடுவதில்லை.

இப்படியிருக்குங் காலத்தில் இவர், தம்முடைய பள்ளிக்கூடத்துச் சிநேகிதராகிய கண்ணப்ப உடையாரை அடிக்கடி பார்த்து வருவார். அவ ரும், தாம் பெரிய உத்தியோகத்திலிருந்தாலும் இவரை அவமதிக்காமல் இவரிடத்தில் பழைய சிநேகத்தைப் பாராட்டிவருவார். பொன்னப்ப பிள்ளை, கண்ணப்ப உடையாரைச் சந்திக்கும்போதெல்லாம், "என்னசார்! நீங்கள் இவ்வளவு படித்துப் பெரிய உத்தியோகத்திலிருந்தும் புதிய துறை களின் முறைகளைக் கைக்கொள்ளாமல் கருநாடகப் பழக்கங்களையே வைத் துக்கொண்டிருக்கிறீர்கள்; நான் ஆங்கிலம் கற்றதற்குத் தகுந்தபடி ஒரு மேல்நாட்டுக்காரனைப்போல் நடிக்கிறேன்; நம் நாட்டுக்காரர்களிடத்தில் கெட்ட பழக்கங்களெல்லா மிருக்கின்றன; ஒரு விஷயம் பாருங்கள் சார்; நம்மவர்கள் எண்ணெய் தேய்த்து ஸ்நானஞ் செய்கிறார்களே, இதனால் என்ன பிரயோசனம்? உடம்பெல்லாம் வழவழவென்று மிக அநாகரீகமா யிருக்கிறது. சிரசில் சோப் தேய்த்துக் குளித்தால் எவ்வளவோ சௌகரி யமாயிருக்கும்; நான் எண்ணெய் தேய்த்துக்கொள்ளும் இந்தப் பைத்தியக் காரத்தனத்தை யொழித்துவிட்டேன்" என்றார். கண்ணப்ப உடையார், "நண்பரே! நாம் எந்நிலையி லிருந்தாலும் நம் தேசவழக்கங்களை விட்டு அன்னியநாட்டுப் பழக்கங்களை அனுசரித்தல் கூடாது; அதனால் அநேகம் தீமைகளுக்கிடமுண்டாகும்; புறநாட்டாசாரங்களில் நன்மை பயக்கத் தக் கவைகளிருந்தால் அவற்றைமாத்திரம் எடுத்துக்கொண்டு மற்றவைகளை யெல்லாம் தள்ளிவிடவேண்டும்; நம் நாட்டாசாரங்களில் எதையும் கைவிட லாகாது; அங்ஙனம் கைவிட்டால் பெருங்கெடுதி சம்பவிக்கும்; நீங்கள் இப் போது எண்ணெய் ஸ்நானத்தை நீக்கியிருப்பதாகச் சொல்வது உசித மன்று; மேல்நாட்டுக்காரர்கள் அதைத் தள்ளுவதால் அவர்களுக்குக் கெடுதி சம்பவிக்காது; நமக்கு அதனால் மிக்க கெடுதியுண்டாகும்" என்று கூறி னார். பொன்னப்ப பிள்ளை முரட்டுப் பிடிவாதமுடையவராதலின், அவர் வார்த்தையை அங்கீகரிக்காமல் தம் நூதன வழக்கத்தையே விடாது அனுஷ்டித்து வந்தார்.

அவர், எண்ணெய் முழுக்கையே அடியோடு நிறுத்திவிட்டு இஞ்சின் நெருப்பருகிலிருந்து தினந்தோறும் வேலைசெய்து வந்ததால் சில மாதங் களுக்குள் அவருடைய உடம்பில் கொதிப்பேறிக் கண்ணெரிச்சல், மூளை அதிர்ச்சி, வாய் குடல் வேக்காடு, சொறி சிரங்கு, சிலந்தி முதலிய நோய்கள் உண்டாகித் துன்பத்தைவிளைவிக்க ஆரம்பித்துவிட்டன. அவர் பெருந் துய ரடைந்தும் தாம் பிடித்துள்ள பிடிவாதத்தை விடாமல் தேகத்தைச் சொறி

ந்து பிட்டில் வாசித்துக்கொண்டும், உதட்டைச் சுருக்கிப் பல்லைக் கடித்து முகத்தைச் சுழித்துக்கொண்டும் குரங்கு நாடகமாடிக்கொண்டு திரிந்தார். பின்னும் சில மாதங்கள் சென்றபின் சீதபேதியுண்டாகி அவரைப் படுக்கையில் வைத்துவிட்டது. அவருடைய கண்களும் மாசடைந்துவிட்டன. அவர், "அடே அப்பா! இஃதென்ன பெருமோசமா யிருக்கின்றதே; இந்தச் சீதபேதி நமக்கு எமலோகப் பிரயாணச்சீட்டுக் கொடுத்துவிடும்போலிருக்கிறதே" என்று திகிற்பட்டு மேல்நாட்டு முறைப்படி சீதபேதிக்கு ஆங்கிலவைத்தியர்களைக்கொண்டு சிகிச்சை செய்வித்துப்பார்த்தார். குணம் சிறிதும் ஏற்படவில்லை. அவருக்கு மரணபயமுண்டாய்விட்டது. உடனே அவர் தம்முடைய நண்பராகிய கண்ணப்ப உடையாரை வரவழைத்து அவரிடம் தமக்கேற்பட்டிருக்கும் துர்ப்பாக்கிய நிலையைக் கூறினார். உடையார் சிறிதுநேரம் ஆலோசித்து, "நீர் எண்ணெய் ஸ்நானத்தை அடியோடு நீக்கியதால் ஏற்பட்ட துன்பமிது; இனிமேலாவது என் சொற்படி நீர் நடவாவிடில் ஆபத்துக்குள்ளாவீர்" என்று ஓர் ஆயுர்வேத பண்டிதரைக் கொண்டு அவருடையவியாதிகளைத் தகுந்த ஔடதபிரயோகத்தால் தணிக்கும்படி செய்துவிட்டுப் பின்னர், அந்தப் பொன்னப்ப பிள்ளைக்கு, அவ்வைத்தியராலேயே எண்ணெய் ஸ்நானமுஞ் செய்வித்தார். அதன்மேல் பொன்னப்பபிள்ளை பிணிகளினின்றும் நீங்கிச் சௌக்கியமுற்றார். அதுமுதல் அவர் தாம் செய்தது தவறென்றுணர்ந்து வழக்கமாகச் சனிக்கிழமைதோறும் எண்ணெய்ஸ்நானஞ் செய்துவந்ததோடு, மற்ற சுதேச வழக்கங்களையும் அனுசரித்துச் சுகமடைந்தார். இக்கதையினால் எண்ணெய் ஸ்நானத்தின் அவசியம் இத்தன்மைத் தென்று விளங்கும்.

(தொடரும்.) சேம்பூர்-வீ. ஆறுமுகஞ்சேர்வை.

---

## ஆரிய சித்தாந்தம்.

### ஆரியாசாரம்-செல்வத்தாலாம் பயன்.

(72-ம் பக்கத் தொடர்ச்சி.)

அகாரம் சிவத்துக்கு ஒப்பாகக் கூறப்படுவது எவ்வாறெனின், அது கூறுவாம். பிரமன், விஷ்ணு, ருத்திரன், மஹேசுவரன், சதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம் எனப் பரசிவத்துக்கு ஒன்பது வடிவங்களுள. அவற்றுள் சிவம் தன் இயற்கை நிலை திரியாமல் விகாரமற்று நிற்பதே பரப்பிரமம் என்று கூறப்படும். அந்தச் சிவம்பிரபஞ்ச அபிவிருத்தியின் நிமித்தம் சர்வ வியாபகமாய் நிற்கும் அவசரம் சத்தி என்னப்படும். இந்தச்சத்தி நாதத்தை வெளிப்படுத்தும். நாதம் விந்துவைத் தோற்றுவிக்கும். இதனை நாதப்பிரமம் என்றும் கூறுவர். இதுவே சுத்தமாயையாம். இதற்குச சொரூபம் ஒலியேயாம். இதுவே ஐம்பத்தோரட்சரங்களாயும் சொற்களாயும் வேதாதி கலைகளாயும் விரிந்தது. இதற்குச் சப்த பிரபஞ்சம் என்று பேராம். இதன்

அதோபாகமே, அசுத்தமாயையாம். அதினின்று சராசர பிரபஞ்சபேதங்க ளுண்டாயின. சதாசிவ மகேசுவரர்கள் இந்தச் சுத்தமாயையில் சொரூபம் கொண்டே அடியார்களுக்குக் காட்சியளிப்பதுமாம். ஆதலால் சத்தம்வேறு காமல் சிவசொரூபமேயாம். இதனாலேயே மஹாதேவன் நாதவடிவனென்று நூல்கள் கூறுகின்றன.

இந்தநாதம் வர்ணசொரூபங் கொள்ளும்போது வரிவடிவம் ஒலிவடிவ மென்று இரண்டு சொரூபங்களா யிருக்கும். அவற்றுள் வரிவடிவம் யாவர் கட்புலனுக்கும் புலப்படும்படி ஏட்டில் எழுதப்படுவதாம். இவ்வரிவடி வெழுத்துக்கள் பாஷைகள் தோறும் உருத்திரிந்து புலப்படும். ஒலிவடிவம் எல்லாப் பாஷைகளிலும் ஒரேதன்மையதாய் விகாரப்படாம லிருக்கும். அவ்வப்பாஷையோர் உச்சரிக்கும் முறையால் எழுத்துக்கள் வேறுபட்டாற் போற் காணப்படினும் சொற்களில் வேறுபடாமலே உச்சரிக்கப்படும். இத னால் ஒலிவடிவமாகிய நாதபிரம்மம் எவ்விடத்தும் தன்னிலை திரியாமல் ஒரேதன்மையாக நிறைந்து நிற்பதை யுணரலாம். இவற்றை மிருகபட்சிக ளிடத்தும், ஊர்வன விடத்தும் ஊகித்து அறிந்துகொள்ளலாம். சராசர பேதங்கள் எல்லாவற்றிலும் இந்த நாதம் வியாபித்து நிறைந்தேநிற்கு மென் பது கண்டுகொள்ளலாம்.

இனி இந்தநாதப் பிரமத்தின் இயற்கைச் சொரூபமாவது "அ" என் பதேயாம். எப்படிப் பரப்பிரமம் தன்னியற்கைச் சொரூபமாகிய அறிவில் படாமல் நிற்குமோ அப்படி நாதமும் தன்னியல்பிற்றிரியாது "அ" என் கிறதொனி வடிவமாகவே நிற்கும். பிரமம் பிரபஞ்சமாய் விரியும்போது பலபல சொரூபங்களாக விகாரப்பட்டுத் தோன்றுவதுபோல நாதமும் வர்ண சொரூபங்களாக விரியும்போது பலவிதமாய் விகாரப்பட்டு நாநாவித எழுத்துக்களாகும். இனி நாமிங்கெடுத்துக்கொண்டது உயிரெழுத்துக்களை யேயாம். அவற்றுள் நாதவடிவாகிய அகரம் அங்காத்தலின் மாத்திரையால் தோன்றும். அவ்வகரமே நாதத்தின் ஆதி ஒலிவடிவாம். அது நீண்டு விகாரப்படுதலே "ஆகாரமாம்". அண்பல்லும் நாவிளிம்பும் சேர்ந்து அங் காத்தல் முயற்சியால் இ ஈ எ ஏ ஐ என ஐவகையாக விகாரப்பட்டுத் தோன்றும். அவற்றொடு இதழைக்குவித்தலால் அகரம் "உ ஊ ஒ ஓ ஔ" என்ற ஐவகை எழுத்துக்களாக விகாரப்படும். இதனால் அகர உயிர் ஒன்றே தன் விகாரப்பாட்டினால் பதினோர் உயிர்களுமாய் அவற்றுக்கு முதலில் தனித்து நின்றும் முதன்மை பெற்றிருத்தலால் உயிரெழுத்துப் பன்னிரண் டாயின. இதனால் அகரம் எல்லா உயிர் எழுத்துக்களிலும் நிறைந்து நிற்கு மென்பது பெறப்படும். அன்றியும் தனித்தியங்கு மாற்றலில்லாத மெய் யெழுத்துக்களிலும் வியாபித்து அவற்றை இயங்கச்செய்யும் ஆதலால் உயிர் மெய் எல்லாவற்றுள்ளும் அகரம் வியாபித்து நிற்குமென்பது புலப்படும். ஆதலால் சிற்சடப் பிரபஞ்சமுற்றிலும் வியாபித்து நின்று அவையேதானாகி யும், தானே அவையாகியும், அவற்றுக்கு வேறாய்த் தனித்து நின்றும் சகல பிரபஞ்சத்தையும் நடத்தும் இயல்புள்ள பரப்பிரமத்துக்கு அகரம் உவமை யாயிற்று. இக்கருத்துபற்றியே வேதாதி கலைகளும் அவற்றை யோதி

புணர்ந்த மேலோரும் பரசிவப் பிரபுவை வேதசொரூபி யென்றும், நாத சொரூபியென்றும் கூறுவது. சர்வபிரபஞ்ச சொரூபியாகிய பிரமத்துக்குச் சர்வசப்தபிரபஞ்ச சொரூபியாகிய அகர உயிரைத்தவிர வேறுவமை கூறுதல் அருமையேயாம். இந்த நாதமும் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து நிற்பதும் ஊகிக்கத்தக்கது. இனி சுற்றந்தழுவுதலுடன் சேர்த்துக் கூறப்பட்ட " ஒப்புரவு " என்பதைக் கவனிப்போம்.

ஒப்புரவு என்பது உலகநடையினையறிந்து செய்தல் என்று பரிமேலழகர் கூறினர். இதனையே, " ஒப்புரவொழுகு, ஊருடன் கூடிவாழ், தேசத்தோடொத்துவாழ், நாடொப்பனசெய் " என்றவாக்கியங்களால் விளக்கியருளினர் அன்னையார். அதாவது உலகநடை இனிது நடத்தற்பொருட்டு ஒருவருக்கொருவர் உபகாரஞ்செய்து கொள்ளுதல். அங்ஙனஞ் செய்து கொள்ளாக்கால் உலககாரியம் இனிது நடவாது. உபகாரம் செய்தவனை உலகம்வாயார வாழ்த்தும். அவனுக்குச்செல்வாக்கும் உண்டாகும். அவனை எல்லாரும் பெரியவனாகவும் மதிப்பார்கள். இந்த உபகாரமும் பிரதிபலனை யிச்சித்துச் செய்தலும். இச்சியாமற்செய்தலுமென இருவகையாம். பிரதிபலனை இச்சித்துச்செய்வது தன் பலனைக் கொடுத்து அழியும், ஆயினும் புகழ்ச்சிக்குரியதே. அதுவும் இம்மையோ டொழியும். பலனைவிரும்பாமற் செய்வது இம்மையிற் புகழையும் மறுமையில் நல்லகதியையுந்தரும். அது பற்றியே,

" கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு "

என்று தேவர் கூறினர். கைம்மாறு வேண்டாமல் மழைபெய்து உபகரிக்கும் மேகத்துக்கு உலகம் என்னபிரதி உபகாரத்தைச் செய்யும். அது போலப் பிரதிபலனை வேண்டாமற் செய்யும் உபகாரத்துக்கும் மனிதரால் ஒன்றுஞ் செய்யவியலாது என்பதாம். உபகாரம் செய்தலாவது, பிறர்வருந்துதல்கண்டவழி அவர்களுக்கு அன்னவஸ்திராதிகளை உதவி அவரதுதுயர மொழித்தலாம். மற்றவர்க்கு அவசியமாக வேண்டுமவற்றை அறிந்து கொடுத்தலுமாம்.

" புத்தேளுலகத்து மீண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற. "

இந்த ஒப்புரவைக்காட்டிலும் மேலான செயல் விண்ணுலகத்தும் மண்ணுலகத்து மில்லை யென்பதாம். என்றதனால் இதற்கு ஒப்பும் உயர்வும் எவ்வுலகத்திலு மில்லை யென்றதாயிற்று. இது உலகத்தில் அழியாத புகழுடம்பை நிலைபெறச்செய்யும், மறுமையிற் பேரின்பந்தரும்.

அங்ஙனமாயின் இது நித்தியவிதியிற் கூறிய நித்திய நைமித்திக கன்மங்களி லடங்காதோ எனின், அடங்காது. நித்தியம் என்பது தெய்வத்தை உத்தேசித்து வேதவிதிப்படி மந்திரபூர்வகமாகச் செய்யப்படுவது. நைமித்திகமும் இன்னின்ன காரணங்களால் இக்கருமங்கள் செய்யவேண்டுமென்று நூல்களால் உணர்ந்தபடி மந்திரபூர்வமாகச் செய்யப்படுவது. இந்த ஒப்புரவு அவ்வாறின்றிப் பிறரைக் கண்டவழி அவரது கருத்தைத் தன்னறிவா

லறிந்து செய்யப்படுவது. ஒப்புரவு என்பதற்குப் பொருள்கூற வெழுந்த பரிமேலழகர் உரை, உலகநடை அறநூல்களாலறிந்துகொள்ளாமல் தாமே யறிந்து செய்யப்படுவது என்று கூறிற்று. பிறர் துயர்கண்ட வழி அதை யறிந்து மனமகிழ்ச்சியொடு செய்யப்படும் உபகாரமே ஒப்புரவு என்பதாம். இவ்வொப்புரவினுல் அடையப்படும் பயன் புகழ் என்று பரிமேலழகர் கூறினுர். புகழ் இம்மையோடொழிவதே யாதலால் மறுமையிற் பேரின்ப மெய்துவது யாங்ஙனமெனின் ஒருவன் புகழுடம்பு எதுவரையில் உலகத்தில் நிலைபெற்றிருக்குமோ அதுவரையிலும் அப்புகழுடம்புடையான் மறுமையிற் பேரின்பநுகர்வான் என்று கூறுதலால் என்க.

ஒரு அரசன் அளவற்ற தானதருமங்களைச் செய்து பூலோகத்தில் தன் புகழை நாட்டிப் பரலோகம் சென்ருன். அவ்விடத்தில் அளவிடப்படாத காலம் இன்பங்களை நுகர்ந்திருந்தான். பிறகு தேவர்கள் அவனை நோக்கி உன் புண்ணியங் குறைந்தது இனி நீ மண்ணுலகம் செல் என்ருர்கள். அவன் இல்லை என் புண்ணியங் குறையவில்லை யென்ருன். அப்படியானுல் பூலோகம் போய் அவ்விடத்தில் உன்பேர் இருக்கிறதாவென்று தெரிந்துகொண்டுவா வென்று அனுப்பினுர்கள்.

அவன் வெகுகாலங் கண்டவராகிய மார்க்கண்டேய முனிவரிடம் சென்று தன்வரலாறு கூறிக் கேட்டான். அவர் எனக்குத் தெரியவில்லை. என்னிலும் பெரியவராகிய காகமுனிவர் ஒருவர் இருக்கிருர். அவரைக் கொண்டு தெரிந்து கொள்வோம். அவர் விந்தியமலைச்சாரலி லிருக்கிருர் என்ருர். மார்க்கண்டேயருடன் அரசன் தான் ஒருவடிவம் எடுத்துக் கொண்டுபோய் விந்தியமலையை அடைந்தான். மார்க்கண்டர் காக முனிவரை விளித்து வந்த காரியங்கூறி நீர் அறிந்திருப்பீரே, அறிந்தால் சொல்லும் என்று கேட்டார். அவர் நான் அறியமாட்டேன். குரண்ட முனிவர் என்பவர் எனக்குச் சிநேகிதர். அவர்வெகுகாலங் கண்டவர். அவரைக் கேட்கவேண்டும் என்ருர். அரசன் அவ்விருவரையுந் தூக்கிக்கொண்டு குரண்டமுனிவரிடம் போய்க் கேட்டான். அவர் எனக்குத் தெரியாது என்னைவிட வெகுகாலங்கண்ட கூர்மரிஷியென்பவ ரிருக்கிருர். அவரைக் கேட்போமென்ன, அரசன் மூவரையுஞ் சுமந்துகொண்டு கூர்மரிஷி வசிக்கிற மடுவை அடைந்தான். குரண்டர் அம்முனிவரை விளித்து விஞவினுர். அவர் சற்றுநேரம் யோசித்துக் கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக முனிவர்களைநோக்கி முனிவர்களே! இவ்வரசனை நான் அறிவேன். இவன் மஹா தார்மிஷ்டன். அளவில்லாத பசுக்களைத் தானம் செய்தான். அவன் நீரோடு தானம்செய்த பசுக்களின் காலடிச் சுவட்டினுல் உண்டான பள்ளமே இந்தமடுவாயிற்று என்று சொன்னவுடனே வானத்தில் தெய்வவிமானம் ஒளிவீசிக் கொண்டு தோன்றியது. அதில் வந்த தேவேந்திரன் அரசனே இதை நான் அறிவேன். பூலோகத்தில் அதன் பேர் மறக்கப்பட்டிருக்கிறது. அதைப் பரவச்செய்யவே உன்னை அனுப்பினேன். விமானத்தில் ஏறிக்கொள் என்ருன். அரசன் சற்றுப் பொறும், இம் முனிவர்களை அவரவர் ஆச்சிரமத்தில் சேர்த்து விட்டு வருகிறேனென்று கூறி, அவர்களைக் கொண்டுபோய் அவர்களிடத்தில் சேர்த்துவிட்டுப் பின் விமானத்திலேறிக்கொண்டு சொர்க்க லோகம் போய்ச் சேர்ந்தான். அந்த மடுவும் புண்ணிய தீர்த்தமாயிற்று என்று இதிகாசங் கூறுகின்றது. இந்தச் சரித்திரத்தை வியாசமுனிவரும் பாரதத்தில் விரித்துக் கூறியிருக்கிருர். ஆதலால் இகலோகத்தில் தன் புகழுடம்பை நிலைபெறச் செய்கிறவன் மறுமையில் புண்ணியலோகங்களில் சென்று

இன்பம் நுகர்வான் என்பது திண்ணம். ஆதலால் கைம்மாறு கருதாமல் பரோபகாரஞ் செய்வது, இம்மையிற் புகழையும் மறுமையில் புண்ணிய லோகங்களையும் அடையச்செய்யும். அதுவே ஒப்புரவின் பயனும். சுற்றந் தழுவுதலுடன் கஷ்டப்படுகிறவர்களுக்கும் தன்னாலியன்றவரை உபகாரம் செய்யவேண்டும். இதனாலேயே,

"தாளாற்றித் தந்தபொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற்பொருட்டு"

"ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து"

என்று தேவர் கூறியருளினார்.

முற்றிற்று.

சிவானந்தசாகா யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்.

(92-ம் பக்கத் தொடர்ச்சி.)

[பகவானே ! 18 - வது அத்தியாயம் 3 - வது சுலோகத்தி லருளிய, வாதிகளின் பக்ஷங்களுள் எது தங்களாற்றுணிந் தருளப்பெறுவது? முதலாவதா? இரண்டாவதா ? மூன்றாவதா? என்னும் அருச்சுனனது வினாவிற்கு இரண்டாவது பக்ஷமே எமது துணிபு என்று ஸ்ரீ பகவான் விடையருளல்]

ஹே அருச்சுன ! யாகதான தவவடிவமான கருமம் தியாகிக்கத் தக்கதாகாது, செய்யத் தகுந்ததேயாம். யாகதான தவமென்னும் மூன்றும் பலனில் இச்சையற்ற புருடர்களைப் பவித்திரஞ் செய்வதேயாம்.

ஹே பார்த்த ! சுருதியின் சம்பந்தமும் ஸ்மிருதியின் சம்பந்தமுமான அக்கினி ஹோத்திராதியாகம், உத்தமதேச காலத்தில் சுபாத்திரத்தில் சாத்திரவிதிப்படி, கோ, பொன், அன்ன முதலியவற்றை யீயுந்தானம், கிருச்சிர சாந்திராயண வடிவமான தவம், என்னும் மூன்றும் முதன் மூன்றாச்சிரமிகள் ஆசிரிக்கத்தக்க சாஸ்திர விகிதமான சர்வகருமங்களின் உபலக்ஷணமாம். அவை மோக்ஷ முதலிய பலன்களில் இச்சையில்லாதவரைப் பரிசுத்தமாக்கும்; அதாவது அவை ஞானத்தின் தடையாகிய பாவமலத்தை நீக்கி ஞானமுதிக்கத்தக்க புண்ணிய குணத்தை யுண்டாக்கிப் பலனில் இச்சையற்றவரின் தூய்மையேயாகும். இங்கு அந்தக்கரண வுபாதியின் சுத்தியினாலே அதன் உபகிதரின் சுத்தியை ஸ்ரீ பகவான் கருதியருளியதாம். யாகாதிகள் பயனை விரும்பாதவர்க்கு மனத்தூய்மையை யாக்குவனவாம். ஆகலின் மனத்தூய்மையை விரும்பிய கரும அதிகாரி பலத்தின் இச்சையற்ற அவற்றை ஒருகாலும் விடாமற் செய்தல்வேண்டும். இதனால் ஸ்ரீ பகவான் யாகாதிகளைத் தியாகம் செய்யாமையை யருளினார். அதனாலே பொருளால் அவற்றின் செய்கை யடைவுறுமாதலின் மீளவும் அவற்றின் செய்கையை யருளல் பொருந்தா தாம் எனினும் அவற்றின் செய்கையில் மிக்க ஆதரத்தின் பொருட்டு மீண்டும் அருளினர். செய்தற்பாலனவா மென வேதம் விதித்துண்மையாலே யாகாதிகள் செய்யத்தக்கனவே யாமாதலின் அவை அதிகாரியால் ஒருகாலும் விடத்தகாதனவேயாம்.

[ஹே கருணை மூர்த்தியே! யாகாதிகட்கு ஒருகால் மனத்தூய்மை செய்வதில் ஆற்றலிருக்குமாயின், மோக்ஷ முதலியவற்றை விரும்பிச் செய்தபோ

திலும் அவை மனத்தூய்மை யாகுமாதலின் பலேச்சையைப் பரித்தியாகித்தல் பயனில்லாத கூற்றேயாம் என்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் விடையருளல்.]

ஹே கௌந்தேய ! முற்கூறிய யாகதானாதி கருமமும், கர்த்திருத்துவ அபிமானத்தையும் சுவர்க்காதி பலத்தையும் பரித்தியாகித்துச் செய்யத் தக்கதாம் என்பது பரமேசுரராகிய எமது மேன்மையான துணிபாம்.

ஹே குழந்தாய் ! காமியகருமமும் தானதரும இயற்கையாலே மனத் தூய்மையைச் செய்யுமாயினும், அதனால் உளதாகிய வுளத்தூய்மையானது அதன்பயனான சுகத்தை அநுபவிக்கு மாத்திரத்திலே உபயோகமாம். ஆன்மஞானத்திற் சிறிது மாத்திரையும் உபயோகமாகாதாம். இதனைவார்த்திகக் கிரந்தகருத்தாவாகிய ஸ்ரீ சுரேசுவர ஆசிரியரும் அருளியுள்ளார்கள்:- காமியகருமங்களைச் செய்தபோதிலும் மனத்தூய்மையே ஆம்; ஆனால் அதனாலாகிய தூய்மை கேவலம் போகசித்தியின் பொருட்டேயாகும். ஞானோற்பத்தியின் பொருட்டாகாதாம். எதனாலே இந்திர சம்பந்தியாய சுகபலம் மலின அந்தக் கரணத்தோடு கூடியமலப்பன்றி முதலியவற்றின் றேகத்தாலே போகிக்க முடியாதோ; தூயமனமுடைய தேவதேகத்தாலே போகிக்க முடியுமோ; ஞானத்தி லுபயோகமான மனத்தூய்மையை யுண்டாக்கும் யாகாதிகள் பலேச்சை வாயிலாய்ச் செய்யப்படின் பந்தகாரண ரூபமாயினும் பலேச்சையில்லாது செய்யப்படின் பந்தஹேது ரூபமாகாதாமாதலின், முமுக்ஷுக்கள் பலேச்சைவாயிலாய் அவற்றைச் செய்யாமல் அதைவிடுத்தே செய்யத்தக்கதாம் ; ஆண்டு யவ்வனாதி யவத்தையும் வருணமும் ஆசிரமுமான இவற்றிற்கு நிமித்தமாகிய யான் இக்கருமத்தைச் செய்கின்றேன், என்னால் இஃதின்றி யமையாது செய்ய யோக்கியமாயது, என்னும் கர்த்திருத்துவ அபிமானஞ் சங்கமாம்; இச்சைக்கு விடயமாகிய அவ்வக்கருமத்தாலே யடையப்படும் துறக்கமுதலிய பொருள்கள்பயனும். இவ்விரண்டையும் விடுத்தே கருமத்தை மனத்தூய்மையின் பொருட்டுச் செய்ய வேண்டும். இங்ஙனமாதல் எமது சம்மதமாம். இதனாலே ஹே கௌந்தேய! கருமாதிகாரியால் யாகாதிகள் விடத்தக்கனவா ? விடத்தகாதனவா? என்னும் இரண்டனுள், விடத்தகாதன வென்னும் எமது மதம் மிகவும் மேன்மையதாம். ஸ்ரீ பகவான் முன் 4 - வது சுலோகத்திற் கூறியருளிய தமது துணிபையும் சங்கரித்தருளினார்.

[யாகதான என்பதாதிய வசனத்தால் ஸ்ரீ பகவான் முன்மொழிந்தருளிய தமது பட்சத்தை இதுவரையிலும் நிலைபெறுத்தி யருளினர்; இப்போது த்யாஜ்ய மென்பதாதிய வசனத்தாலே முன்மொழிந்தருளிய பரபக்ஷத்தில் முன்மொழிந்த தியாகமூவகையை வியாக்கியானித்து நிஷேதிக்கத் தொடங்கி யருளுகின்றார்,]

ஹே அர்ச்சுன ! கருமத்தின் தியாகம் சம்பவியாதாம். அநித்தியகருமத்தை மோகத்தாலே பரித்தியாகித்தல் தாமதத்தியாக மெனப்படும்.

ஹே பார்த்த ! சுவர்க்காதி பல இச்சையுடன் செய்த காமியகருமம் மனத்தூய்மையின் ஹேதுவாகாதாம்; மாறாகப் பந்த ஹேதுவேயாம். ஆகலின் அது தோஷமுடையதேயாம். இதனாலே பந்தத்தை நீக்கும் ஆன்மஞானம் விரும்பியோன் ஆற்றிய காமிய கருமத்தியாகமோ சாத்திரத்தாலும் ஊகத்தாலும் சம்பவிப்பதேயாகும்; ஆனால் மனத்தூய்மை யேதுவாதலின் தோஷமற்ற சுருதிமிருதி விகித அக்கினிஹோத்திர சந்தியாவந்தனாதி நித்தியகருமத்தியாகஞ் செய்தல் மனத்தூய்மை விரும்பினவனாகிய முமுக்ஷு

விற்குச் சாத்திரத்தாலும் ஊகத்தாலும் சம்பவியாதாம். மற்றே, மனத்தூய்மையின் பொருட்டு முமுக்ஷுக்கள் நித்தியகருமத்தை இன்றியமையாது அனுஷ்டிக்க வேண்டும். இப்பொருள் முன்னருமருளப் பெற்றது. மனத்தூய்மையை யுண்டாக்கும் நித்தியகருமத்தை மோகவயத்தால்விடுதல் தாமதத்தியாகமாகும். வேதவிகித நித்திய கருமத்தில் நிஷித்தத்தன்மை யுணர்வும், அர்த்த ஹேதுவாகிய அதன்கண்ணே அனர்த்த ஹேதுமதியும், தருமரூபமென்பவற்றில் அதருமத்தன்மை மதியும், அனுஷ்டான யோக்கியமாய அதில் அனனுஷ்டானத் தன்மைமதியும், ஆகிய பயன் ஞானவடிவ விபரீத மோகமாம். இம்மோகவயத்தால் நித்தியகரும பரித்தியாகம் தாமசத்தியாகமாம். இம்மோகம் சாங்கியசாஸ்திர முடையார்க் குண்டாம்; அவர்கருத்திதுவாம்:—காமியகருமங் தோஷமுடைய தாவதேபோல அக்கினிஹோத்திராதி நித்தியகருமங்களும் தோஷமுடையனவேயாம்; என்னை, நித்திய கருமங்களுள்ளும், நென்முதலியவற்றைக் குத்தலின் யாகசாலையைத்துலக்கலின், அக்கினியில் ஹோமஞ்செய்தலின் ஜீவர்கட் கிம்சையாம்; பசுக்கட்கும் இம்சையாம். ஆதலின் நித்தியகருமமும் ஹிம்சைவடிவ தோஷமுடையதாதலின் காமியகருமம்போலத் துஷ்டமேயாம். "எல்லாப்பிராணியையுமே இம்சிக்கலாகாது" என்னுஞ்சுருதி சர்வபூதங்களின் இம்சையை நிஷேதஞ்செய்துளதாதலின் யாகத்திற்செய்யும் பசுவினிம்சையும் நிஷித்தமேயாம். மனத்தூய்மையோ ஹிம்சைப்பிரதான நித்திய கருமமின்றிக் காயத்திரியாதி மந்திரங்களின் ஜபததாலேயாம். இது ஸ்ரீமகாபாரதத்திலுங் கூறப்பெற்றுளது. காயத்திரி முதலிய மந்திரங்களின் ஜபமோசர்வதருமங்களினும் பரமதருமமெனப்படும்; என்னை, ஜபயாகத்தினும் வேறாகிய ஜோதிஷ்டோமாதி யாகங்களியாவும் பூதங்களி னிம்சையாலே பொருந்துவதாம்; ஜபயாகமோ அஹிம்சையாலே முயல்வதாம்; இதனாலே இஃதியாவினும்உயர்ந்ததாம். இதனைமனுவும் கூறியுள்ளார். காயத்திரியாதிகளின் ஜபத்தாலே பிராஹ்மணன் மனத்தூய்மையையடைவன்; இவ்விஷயத்தில் சிறிதுமாத்திரையும் ஐயமின்றாம். மனத்தூய்மையின் பொருட்டு அதிகாரி வேறொரு கருமத்தைச் செய்யவேண்டு மென்றேனும் வேண்டாமென்றேனுமின்றாம். அஹிம்சை வடிவமான மைத்திரியை யுடையவனே பிராஹ்மணனெனப்படுவன் என்பதாதி சாத்திரங்கள் நித்தியகருமத்தை நிஷேதித்து மனத்தூய்மைக்கு ஜபத்தையே விதிக்கின்றதாதலின் மனத்தூய்மையற்ற கரும அதிகாரியாலும் நித்தியகருமம் விடவேதக்கதாம் என்பர். இக்கூற்று மிக முரணுடையதாம்; என்னை, யாகத்தில் பசு முதலியவற்றின் இம்சை அனர்த்தஹேதுவாகாதாம்; யாகமிலா அஃதே அனர்த்தஹேதுவாம். மேற்கூறிய அஹிம்சைச் சுருதி பூதஹிம்சையை நிஷேதிக்கினும் யாகம் போரின்றியஹிம்சைபரமாம் அந்நிஷேதம்; ஒருகாலவ்வசனம் சர்வஹிம்சை மாத்திரத்தையே நிஷேதிப்பதாகுமே யாயின், யாகத்தில் பசுஹிம்சையை விதிக்கும்வசனம் வீணேயாம். வேதமொழியை வீணெனல் மிகமுரணுமாதலின் இருவசனத்திற்கும் பரஸ்பரம் சாமானிய அபவாதபாவம் புனைந்து வ்வஸ்தைசெய்தல் உசிதமாம். எப்பிராணியையு மிம்சியாதொழிக வென்பது சாமானியமாம்; அக்கினி ஷோமீயவசனம் அபவாதமாம்; அபவாதத்தலத்தை விடுத்தே அயலிடத்திற் சாமானிய வசனப் பிரவிருத்தியாம்; யாகம் போரின்றி யெவ்வுயிரையும் இம்சைசெய்யற்கவென அதன்பொருள் கொள்க; கொள்ளவே சாத்திரவிகிதமாக சம்பந்திஹிம்சை தோஷரூபமாகாதாம். முன்மொழிந்த மகாபாரத மனுவசனங்களும் கேவலம் ஜபயாகத்தின்றுதி பரமாமன்றி யாக சம்பந்திஹிம்சையில் அதர்மத் தன்மையைப்

போதியாதாம். இதை நிந்தியாமல் அதைத்துதிக்கின்ற தென்பதே கருத்தாம். எவ்வசனத்திற் கெப்பொருளிற் கருத்தாமோ அதற்கதுவேபொருளாமாகலின் சாங்கியர்க்கு மேற்கூறியவாறு தோற்றுதல் மோகமேயாகும். மோகவயத்தால் நித்தியகருமத்தியாகம் தாமசத்தியாகமாம்; மோகம் தமரூபமேயல்லவா. (தொடரும்)

சீடன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(94-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 11-வது அத்தியாயம்.

சுமார் ஒருமணி நேரம் கழித்து, கறுப்பண்ணன் வீட்டிற்குள் இரண்டு பேர் முன்னும் பின்னுமாகச் சென்றார்கள்.

முதல் சென்றவன் கள்ளத்தனமாய் வீட்டிற்குள் நுழைந்தான். பின்னால் வந்த லாயர் பகிரங்கமாய்க் கதவைத் தட்டி உள்ளே சென்றான்.

ஆனந்தலிங்குக்கு லாயரின் புத்தி சாமார்த்தியத்தில் பூரண நம்பகமுண்டெனினும் அவன் யோக்யதையில் நம்பகமில்லை. லாயர் உடனே கறுப்பண்ணனிடம் செல்வானென்று தெரியும். ஆகையால் அவன் உண்மையைச் சோதிக்கவெண்ணி கறுப்பண்ணன் வீட்டிற்கு லாயருக்கு முன்னாடியே சென்றான்.

கறுப்பண்ணன் லாயருக்காக மிக்க ஆவலோடு காத்துக்கொண்டிருக்கிறான். ஏனெனில் லாயர் சந்திக்கப்போகும் ஆவேசம் உண்மையில் யாராயிருக்குமென்று அவனுக்கு முக்கால்பங்கு நம்பகமுண்டு. ஆகையால் மாறுவேடமணிந்த ஆனந்தலிங் லாயரிடம் எப்படியும் சிக்கிக்கொண்டு மடிவான் என்று அவன் எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறான்.

கறுப்பண்ணன் லாயரைக் கண்டதே மிக்க நம்பிக்கையோடும் சந்தோஷத்தோடும் "ஆ! என்ன சங்கதி முடித்துக்கொண்டு வந்தாய்?" என்றான்.

**லாயர்:**—ஆவேசம் ஒழிந்தது.

**கறுப்பண்ணன்:**—எங்கே? என்றான்.

**லாயர்:**—இதுகாறும் அதன் சவம் ஆற்றில்போய் சேர்ந்திருக்கும்.

**கறுப்:**—ஆள் யார்?

**லாயர்:**—நான் அதையெல்லாம் ஆராயவில்லை. எனக்கு அத்தகைய விஷயத்தில் அதிக நாட்டம் வைக்க மனம் ஒப்புவதில்லை. ஆளைச் சரிப்படுத்தி முடிந்தது என்றதைக் கண்முன்பாய்க் கண்டுகொண்டேன். இனி சவத்தை யொருவினாடிகூட என் ஆபீஸில் வைக்கக்கூடாதென்ற ஒரே யெண்ணம் உண்டாயிற்று. ஆகையால் உடனே சவத்தைக் கொணடுபோய் ஆற்றில் போட்டுவிடும்படி கூறிவிட்டேன்" என்றான்.

சற்றுநேரம் இருவரும் மௌனமாயிருந்தார்கள். கறுப்பண்ணன் மனதில் விபரீத யோசனை யுதித்தது. இச்சமயம் தான் லாயரைத் தனியே சந்தித்திருக்கிறான். ஆனால் மலையாளி யச்சமயம் வீட்டிலில்லை. ஆனால் இம்மாதிரி நடந்துகொள்ள வேண்டியதென்று அவனுக்குக் கூறியிருக்கிறான்.

**கறுப்பண்:**—நீ நல்லவேலை செய்தாய்?

**லாயர்:**—ஆம். எனக்குச் சேரவேண்டிய இனாமைக் கொடுக்கிறதுதானே.

கறுப்பண்:—ஆகா தடையின்றி.

லாயர்:—எப்போது ?

கறுப்பண்:—“ எல்லா வேலையும் முடிந்ததே ” என்றான்.

கறுப்பண்ணனுடைய யோசனையாவது “ லாயர் நமது முக்கியவிரோதியாகிய ஆனந்தலிங்கைக் கொன்றுவிட்டான். இனி நமக்குப் பயமில்லை. லாயருக்குத்தான் நமது இரகசியம் அதிகமாய்த் தெரிந்திருக்கிறது. ஆகையால் இவனை யிப்போதே ஒழித்துவிடவேண்டும் ” என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டான். அச்சமயம் மலையாளி மெதுவாய் அறைக்குள் வருவதைக் கண்டதே அவனுக்குச் சமிக்கை காட்டிவிட்டான்.

மலையாளி தன் கையிலிருந்த கூர்மையான ஈட்டியையோங்கி லாயர் மேல் பாய்ந்தான். ஆச்சு மறுவினாடி யவன் உயிர் போயேயிருக்கும். ஆனால் அச்சமயம் டுமில் என்று ஒரு சத்தம் கேட்டதும் மலையாளியின் ஈட்டிபிடித் தோங்கிய கரத்தின் தோளில் குண்டுபாய்ந்ததும் அவன் கீழேவிழுந்தான்.

மறுவினாடி லாயர் “ ஆ ! சதியாலோசனை” என்றதும் தன் கைத் துப்பாக்கியை யெடுத்து ஆத்திரத்தோடு கறுப்பண்ணனைச் சுட்டான். கறுப்பண்ணன் உடனே தரையில் பொத்தென்று கவிழ்ந்து விழுந்தான். முன் யோசனைசெய்தே இப்படி நடந்தார்களென்று லாயரின் மனதிற்பட்டதே ஆத்திரத்தோடு மறுபடி கறுப்பண்ணனை நோக்கிச்சுட்டான். அக்குறி மேலே போய்விட்டது. சுட்டுவிட்டதும் அறையைவிட்டு வெளியே யோடினவன் தாழ்வாரத்தில் ஒருவன்மேல் விழுந்தான். அம்மனிதன் “ உன்னைக் கைது செய்கிறேன் ” என்றான்.

லாயர் திடுக்கிட்டு, “ என்னத்திற்காக ?” வென்றான்.

அம்மனிதன்:—“ கறுப்பண்ணனைக் கொன்றதற்காக ” என்றான்.

லாயர் நடுக்கத்தோடு “ அய்யோ தற்காப்பிற்காக சுட்டேன் ”. என்றான்.

அதன்மேல் அவனைப் பிடித்துக்கொண்டு நமது ஆனந்தலிங் கலகலவென்று மெதுவாய் நகைத்து, “ அடமுட்டாள், உன்னைப் பூராய் அவன் ஏமாற்றிவிட்டான் ” கறுப்பண்ணன்மேல் நீ சுட்டகுண்டு படவேயில்லை, அவன் விழுந்து மடிந்ததுபோல் பாசாங்குசெய்தான். நீ அறையை விட்டு ஓடிவந்ததே யவன் எழுந்து உன்னைக் கொல்லத் தவறியதற்காக மலையாளியை வைது கோபித்துக் கொண்டான் ” என்று கூறியதே,

லாயர் அவன் ஆனந்தலிங் என்று தெரிந்துகொண்டு மிக்க சந்தோஷமடைந்து “ஆ ! நீ யென் உயிரைக் காப்பாற்றினாய். இப்போது நான்பூரணமாய் உன்பட்சமே யிருக்கிறேன் என்று தெரிந்துகொண்டா யல்லவா ? இப்போது நாம் செய்யவேண்டிய தென்ன ?” என்றான்.

ஆனந்த:—“என்ன நடக்கிறதென்று சற்றுபார்ப்போம். நீ யவனுக்குவிரோதியாய் விட்டாயென்று அவனுக்குத் தெரியும். ”

லாயர்:—நான் வெளிக்குவந்தால் நானும் சிக்கிக்கொள்வே னென்று அவனுக்கு நன்றாய்த்தெரியும். நீ பின்தொடர்ந் திருக்கிறாயென்றும் அவனுக்குத் தெரியும். ஆனால் இச்சமயம் நீ இறந்துபோய்விட்டா யென்றே யவன் எண்ணி யிருக்கிறான்.

ஆனந்த:—அவன் அப்படியே யெண்ணிக் கொள்ளட்டும். (தொடரும்)

ஆரணி குப்புசாமி முதலியார்.

---

சந்தாநேயர்கள் கவனிக்கவேண்டிய

## அறிக்கை.

சென்ற இரண்டு மாதங்களாக நமது ஆனந்த போதினி சஞ்சிகையை 48 பக்கங்களில் பதிப்பித்து வந்தோம். நாம் கோரியபடி நமக்கது பலன்தராமையால் முன்னிருந்ததுபோலவே இந்தமாத முதற்கொண்டு 40 பக்கங்களில் சஞ்சிகையை பிரசுரிக்கலானோம். பத்திராதிபர்.

### ஆச்சரியப் பிறவி.

மைசூர் டிஸ்டிரிக்ட் சாமராஜ நகர் தாலூக்கா, தேசமல்லி கிராமத்தில் M. புட்டையா தேவர் வீட்டில் 19-8-25 காலை சுமார் 8-மணிக்கு ஓர் பசுவின் வயிற்றில் 2-தலை, முன்கால்-4, பின்கால்-2, ஆக 6-காலும் 1-வாலுமாக தேகம் நெஞ்சிலிருந்து வேறாகப் பிரிந்து ஒரு கன்று பிறந்தது. சுமார் 5-நிமிஷமிருந்து இறந்தது. இது பிரபஞ்ச சிருஷ்டியின் விசித்திரம்போலும்.

* * * *

சேலம் ஜில்லா இராசிபுரம் தாலூக்காவிற்கு ஏழுமைல் தூரத்தில் கிழக்குப்பக்கத்தில் புதுப்பட்டி என்னும் கிராமத்தில் மாரியம்மன் திருக்கோவில் ஒன்றிருக்கிறது. அவ்வம்மன் சத்தி மிகவும் அபாரமானதென்று பலர் புகழ வருடந்தோறும் பங்குனி மாதத்தில் உற்சவம் நடந்துவருகின்றது. சென்ற பங்குனி உற்சவத்தன்று சேலம் குகையிலிருந்து அம்மை வார்த்து இரு கண்களும் இழந்த ஒரு ஸ்திரி, வைராக்கியத்தோடு கோயில் சந்நிதானத்தில் வந்ததும் தன்னுடைய நாக்கை யிழுத்துப்பிடித்து கத்தியினல் அறுத்து பாவாடை போட்டுக்கொண்டு கண் நன்றாய் ஆனால்மட்டும் எழுந்திருப்பேன் இல்லாவிட்டால் இங்ஙனமே உயிர் விட்டுவிடுவேன் என்று வைராக்கியத்துடன் 22 நாள் அன்னாகாரமின்றி ஒரே யிடத்தில் இருந்தாள். பின்னல் அவளுக்கு நேத்திரம் நன்றாய்த் தெரிந்து நாக்கும் முன்போலவே வளர்ந்து எல்லோரோடும் நன்றாய் பேசுகிறாள்.

* * * * *

### ஓர் அதிசயம்.

கோயம்புத்தூர் ஜில்லா, கோபிசெட்டி பாளையம் தாலூக்கா, நன்செய் புளியம் பட்டி பவானி ஆற்றுக்கு மேல்கரையிலுள்ள மத்தாளக் கொம்பு அரசடி விநாயகர் ஆலயத்தின் கண், 30, 40 அடி சுற்றளவுகொண்டு ஓங்கி வளர்ந்திருந்து பின் பட்டுப்போய் முண்டம்போல நிற்கும் ஓராசமரம் ஓர் வருடகாலமாகச் செழித்தோங்கி அனேகர் தங்குவதற் கிடந்தந்திருக்கின்றது. சில பெரியோர் கனவில் அவ்விநாயகர் பிரசன்னமாகி வருகிறார். சந்நிதிக்குமுன் தெய்வீக பொய்கையொன் றேற்பட்டிருக்கிறது. அதில் ஜலம் பூமிமட்டத்துக்குமேல் 3, 4 அடி பொங்கிக் கிளம்புகிறது, பார்ப்போருக்கு இது அதிசயமாகவே யிருக்கிறது. அதில் மூழ்குவோர்க்குள்ள சகல பிணிகளும் நீங்கிவிடுகின்றன. ஜனங்கள் திரள்திரளாக வந்து காணிக்கை செலுத்தி தங்கள் குறைகளைத் தீர்த்துக்கொண்டு போகிறார்கள். சிலர் வனபோஜனஞ்செய்து அநேகருக்கு விருந்து செய்கிறார்கள் என்று நமது சந்தாநேயர் (நெ. 17011) குருசாமிகவுண்டர் தெரிவிக்கிறார்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**துரோதன௵ ஐப்பசி௴—கலியுகாதி 5027, சாலிவாகனம் 1848.**

**பசலி 1335—கொல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1344,**

**இங்கிலீஷ் 1925௵ அக்டோபர்௴—நவம்பர்௴**

| ஐப்பசி௴ | அக்டோபர்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | சனி | ●43-53 | அஸ்8-8 | மர60 | சர்வத்திர அமாவாசை, கேதாரகௌரி விரதம் |
| 2 | 18 | ஞா | பிர42-3 | சித்9-40 | சித்60 | கார்த்தீகசுத்தம்,பலிபூஜா |
| 3 | 19 | திங் | துதி39-27 | சுவா8-8 | அ8-8மர | சந்திரதெரிசனம் 4-ம் பிறைபோல் தெரியும் |
| 4 | 20 | செவ் | திரி35-47 | விசா6-40 | மர6-40சி | ஆலோசனகௌரிவிரதம் |
| 5 | 21 | புத | சது31-40 | அனு4-33 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 6 | 22 | வியா | பஞ்27-13 | கேட்2-0 மூல59-13 | பிர2-0சித் | கரிநாள், கந்தர்சஷ்டி சில ஆலயங்களில் உற்சவம் |
| 7 | 23 | வெ | சஷ்22-30 | பூரா56-13 | பி56-13சி | சூவாதிகார்த்திகை15-35 கந்தர்சஷ்டி, உபவாசம் |
| 8 | 24 | சனி | சப்17-38 | உத்53-0 | சித்60 | யாத்திரைசெய்ய, கதிரறு[க்க |
| 9 | 25 | ஞா | அ12-38 | திரு49-43 | அ49-43ம | கோவாஷ்டமி |
| 10 | 26 | திங் | நவ7-30 | அவி46-20 | சித்60 | பிரயாணம் விலக்க |
| 11 | 27 | செவ் | தச2-23 ஏ57-23 | சதை43-5 | மர60 | ஸ்மார்த்த உத்தான ஏகாதசி,பீஷ்மபஞ்சகவிரதம் |
| 12 | 28 | புத | து52-33 | பூரட்39-57 | அ39-57சி | வைஷ்ணவஉத்தான ஏகா[தசி |
| 13 | 29 | வியா | திர48-15 | உத்37-15 | சித்60 | சீமந்தம்சுபமுகூர்த்த |
| 14 | 30 | வெ | சது44-30 | ரேவ35-5 | அமி60 | வைகுந்தசதுர்த்தசி |
| 15 | 31 | சனி | ○41-45 | அஸ்33-53 | சித்60 | பௌர்ணமி |
| 16 | நவம்பர்௴ 1 | ஞா | பிர40-23 | பரணி33-55 | சித்60 | கார்த்தீகபகுளம் |
| 17 | 2 | திங் | து40-25 | கிரு✡35-18 | ம35-18அ | கிருத்திகை |
| 18 | 3 | செவ் | திரி42-8 | ரோ38-23 | அ38-23சி | |
| 19 | 4 | புத | சது45-30 | மிரு43-3 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 20 | 5 | வியா | பஞ்50-28 | திரு49-8 | மர49-8அ | |
| 21 | 6 | வெ | சஷ்56-28 | புன56-20 | சி56-20ம | |
| 22 | 7 | சனி | சப்60 | பூசம்60 | சித்60 | |
| 23 | 8 | ஞா | சப்3-5 | பூசம்4-5 | சித்60 | |
| 24 | 9 | திங் | அஷ்9-38 | ஆயி11-48 | சி11-48ம | |
| 25 | 10 | செவ் | நவ15-23 | மக18-38 | சித்60 | |
| 26 | 11 | புத | தச19-45 | பூர24-13 | அமி60 | |
| 27 | 12 | வியா | ஏகா22-30 | உத்28-10 | ம28-10சி | |
| 28 | 13 | வெ | துவ23-23 | அஸ்30-18 | அ30-18சி | |
| 29 | 14 | சனி | திர22-22 | சித்30-35 | ம30-35அ | |
| 30 | 15 | ஞா | ச●19-40 | சுவா29-23 | சி29-23ம | விருச்சிகரவி 32-18, சர்வத்திர அமாவாசை |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 15உ தனு-சுக் | | ரா |
| கே | விருச்-புத 17 ,, து-செ | | |
| குரு | சுக் | சூரி-புத சனி | செ |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.